# உபதேச மஞ்சரி.

## (முதற் பாகம்.)

ஸ்ரீ அபிநவவித்யாதீர்த்த ஸ்வாமிகள்
அருளியது

*Compiled by:*

Vedantha Siromani
**Sri N. S. Ananthakrishna Sastrigal**
Retired Sanskrit Pandit, District Board.
Asthana Pandit, Sringeri Mutt



*Published by*

**SRI SANKARA PUBLISHING HOUSE**
**Sivankoil Street, Noorani, Palghat.**
**1957.**

விலை ரூ. 0—12—0 75 நயா பைசா

# உபதேச மஞ்சரி.

## (முதற் பாகம்.)

ஸ்ரீ அபிநவவித்யாதீர்த்த ஸ்வாமிகள்
அருளியது



*Compiled by:*

Vedantha Siromani
**Sri N. S. Ananthakrishna Sastrigal**
Retired Sanskrit Pandit, District Board.
Asthana Pandit, Sringeri Mutt




*Published by*
**SRI SANKARA PUBLISHING HOUSE**
Sivankoil Street, Noorani, Palghat.

श्रीरस्तु

श्री गुरुचरणारविन्दाभ्यां नमः

# முகவுரை.

ऋष्यशृंगपुराधीशः शारदापूजनोन्मुखः ।
अभिनवविद्यातीर्थः शंकरः शंतनोतु नः ॥

விபாண்டக மாமுனிவருடைய புதல்வராகிய ருஷ்யசிருங்க முனிவர் அழிவற்ற புகழுடன் இக்காலத்தும் விளங்குகிறுர் என்பது எல்லோருக்கும் தெரிந்த விஷயமே. சூரிய வம்சத்தில் தோன்றிய தசரத மஹாராஜனுக்கு புத்திரபாக்கியத்திற்குக் காரணமாகியவர் அந்த மாமுனிவர் என்பது விண்ணுலகத்தோர்களுக்கு ஸனக மாமுனிவரால் கூறப்பட்டது என்ருல் அந்த மாமுனிவருடைய மஹிமை மண்ணுலகிலுள்ளோர்களுடைய வசனங்களுக்கு உட்படாதது என்பதில் ஐயமில்லை. பகைமையற்ற மனம், வேற்றுமையற்ற நோக்கம், தவத்தில் அழிவற்ற பொக்கிஷம் என்றிவ்வாறு கூறும் சொற்கள் மிக மிகச் சிறிய சொற்களேயாகும். பூதஉடல் நீங்கிய போதிலும் அந்த மஹாதபஸ்வி தபம் செய்த வனம் வர்ணிக்க முடியாத மஹிமை பெற்றது.

ஸ்ரீ சங்கர பகவத் பாதாள் திக்விஜயம் செய்யும் காலத்தில் பரிசுத்தமான அந்த வனத்தை கண்டு களிப்படைந்தார். இயல்பாகவே, பகைமை கொண்ட பிராணிகள் அப்பகைமையை அகற்றியது மட்டுமல்ல; மாசற்ற நட்புடன் அவ்வனத்தில் வாழ்க்கை நடத்தின. பிரஸவிக்கும் தருணத்திலுள்ள தவளை கடூரமான வெயிலின் தாபத்தை தாங்க முடியாமலிருக்கையில் ஸர்ப்பமொன்று தன் படத்தினால் அத்தவளைக்கு குடைபிடித்து நிழல் உண்டாக்கி உதவி செய்தது. புலிகள் பசுக்கன்றுகளிடம் தாயின் அன்பைக் காண்பித்தன. அத்தகைய சாந்தி குணத்திற்கே இருப்பிடமாகிய பிரதேசத்தைக் கண்டு ஸ்ரீ சங்கர பகவத் பாதாள் ஆனந்தத்தையும் வியப்பையுமடைந்தார்கள்.

ருஷ்யசிருங்க முனிவருடைய தபோவனம் என்று நிச்சயித்தார். அதற்கு அருகாமையில் ஓர் மடத்தை ஸ்தாபனம் செய்தார். தக்ஷிணாம்னாய பீடம் என்று பிரசித்தி பெற்ற சிம்மாஸனத்தை ஸ்தாபித்தார் ஸ்ரீ சாரதா தேவியை எப்பொழுதும் தியானம் செய்கின்றவரும் அந்த தேவியின் காக்ஷி சுகத்தை அனுபவிக்கிறவருமாகிய ஆதி சங்கரர் தனது பிரார்த்தனையைத் தெரிவிக்க பக்தவத்ஸலையாகிய ஸ்ரீ சாரதா தேவியும் அவ்விடம் ஸன்னிதி கொண்டாள். வியாக்யா சிம்மாஸனம் என்று பிரத்திபெற்ற அந்தப் பீடத்தில் தனது சிஷ்யராகிய ஸ்ரீ சுரேசுவராசாரியாரை அமர்த்தினார்.

காலக்கிரமத்தில், ஸ்ரீ வித்யாரண்ய யதீசுவரா ளுடைய தவத்தின் வன்மையாலும், வித்யையின் திறமையாலும், சிறப்பினுலும், ஊக்கத்தாலும் விஜயநகா ஸாம்ராஜ்யத்தின் ஆதரவும், கௌரவமும் பெற்று ஸ்ரீ சிருங்கேரி சாரதாபீடம் இக் காலத்தும் மிக்கச் சிறப்புடன் விளங்குகின்றது.

அத்தகைய குருபரம்பரையில் 35-வது ஆசாரியராக பிரகாசிக்கின்றவர் **ஸ்ரீ அபிநவவித்யா தீர்த்த**—ஜகத்குரு ஸ்ரீ சங்கராசாரிய ஸ்வாமிகள். இந்த மகான் 24 வருஷ காலம் குருசேவை செய்யும்படி நேர்ந்தது. இந்த சிருங்கேரி குருபரம்பரையில்—இதுவே முதலாக நிலவியது. இது வியக்கத்தக்க பாக்கியம். எப்பொழுதும் புன்னகை பூத்த முகமுடையவராகவும், சிஷ்யகோடிகளிடம், அளவுகடந்த அன்பைக் காட்டிக்கொண்டும், தனது தவத்தாலும், தியான நிஷ்டையாலும் உலகங்களுக்கு நன்மையை வளர்த்துக்கொண்டும், தீர்த்தயாத்ரை செய்யும் காலத்தில் ஆங்காங்கு முகமலர்ந்து அருளிய இனிய தேன்மொழிகள் சங்க்ரஹிக்கப்பட்டுள்ளன. யாவரும் பயன்படுத்திக்கொள்க.

[சிருங்கேரி— பங்களூரிலிருந்து பூனு போகும் வழியில் கடூர் அல்லது பீரூர் என்ற ரெயில் ஸ்டேஷனில் இறங்கி—சிருங்கேரி பஸ்ஸில் போகவேண்டும்.]

---

# விஷய அட்டவணை.


| | | இடம் | பக்கம். |
|---|---|---|---|
| 1. | ஸ்ரீ பகவத்பாதாசாரியாருடைய கருணை | சேர்மாதேவி 13—1—57 | 1 |
| 2. | மனிதனுடைய கடமை | கோபாலசமுத்திரம் 16—1—57 | 10 |
| 3. | குலத்தின் பெருமிதம் | பத்தமடை 17—1—57 | 15 |
| 4. | மனிதனுக்கு விசாரசக்தி விசேஷம் | கல்லிடைக்குறிச்சி 20—1—57 | 20 |
| 5. | ஆத்மா நித்யன் | கல்லிடைக்குறிச்சி 22—1—57 | 28 |
| 6. | ஆத்ம ஞானத்திற்கு ஸாதனம் | கல்லிடைக்குறிச்சி 25—1—57 | 37 |
| 7. | ஆஸ்திகத்தின் உயர்வு | கல்லிடைக்குறிச்சி 4—2—57 | 49 |
| 8. | நாமஸங்கீர்த்தனம் | கூனியூர் 5—2—57 | 56 |
| 9. | தானம் சிறந்ததாக இருக்கவேண்டும். | கலிசூழ்ந்தமங்கலம் 6—2—57 | 57 |
| 10. | ஆத்ம ஞானம் சுகத்திற்குக் காரணம் | அம்பாசமுத்திரம் 8—2—57 | 61 |



श्रीशृङ्गेरी जगद्गुरु-श्रीमद्-अभिनवविद्यातीर्थमहास्वामिनः

**श्री जगद्गुरु श्रृंगेरि**

**श्रीमद्भिनवविद्यातीर्थ स्वामिचरणः**

श्री गुरुभ्योनमः

# உபதேச மஞ்சரி

[திருநெல்வேலி ஜில்லா சேரன்மாதேவிக்கு ஸ்ரீ ஜகத்குரு சிருங்கேரி அபிநவ வித்யாதீர்த்த ஸ்ரீ சங்கராசாரிய ஸ்வாமிகள் (10—1—57) விஜயம் செய்தார்கள். பக்த ஜனங்களாகிய சிஷ்ய கோடிகள் மிகப் பணிவுடனும் சிறந்த பக்தியுடனும் ஆசாரிய ரவர்களுக்கு உபசாரம் அர்ச்சனை முதலியவைகளைச் செய்தார் கள். ஆசாரியரவர்களால் அனுக்ரஹம் செய்யப்பட்டனர். சிஷ்யர்களிடம் சிறந்த அன்பைக் காண்பித்து ஜகத்குரு ஸ்ரீ சங்கராசாரிய ஸ்வாமிகள் அவ்வூரிலுள்ள சிஷ்ய ஜனங்களுக்கு அருளிய தேன்மொழிகள்.]

## ஸ்ரீ பகவத் பாதாசாரியருடைய கருணை.

பரிசுத்தமான இப் பாரத பூமியில் பரம காருணிகரான பரமசிவன் ஸ்ரீசங்கர பகவத் பாதா சாரியராக அவதரித்து ஜனங்களுடைய அஞ்ஞான மாகிய இருளை தனது வாக்காகிய ஜோதியினால் அகற்றி அவர்களுக்கு முக்தி சுகத்தை அருளினர். அந்தப் பரமாசிரியர் இயற்றிய நூல்கள், உப நிஷத்துக்களுக்கும், பிரம்ம சூத்திரங்களுக்கும். பகவத்கீதைக்கும் பாஷ்யங்கள் என்று பிரசித்த மானவை.

'भाष्यं प्रसन्नगम्भीरम्' ?

'பாஷ்யம் பிரசன்ன கம்பீரம்'

என்று பாஷ்யத்திற்கு லக்ஷணம். பரிசுத்த மான கங்கை முதலிய நதிகள்போல் பாஷ்ய வச னங்கள் சந்தேகங்களை அகற்றிப் பொருள் விளக்

கம் செய்பவையாயினும் மேதாவிகளுக்கு மேலும் மேலும் பற்பல விசேஷப் பொருள்களை விளக்கும் தன்மையுள்ளவை. கங்கை முதலிய நதிகள் நிர் மலங்களாயினும் ஆழமறிய முடியாதவை. அது போலவே, பாஷ்யங்களும் ஆழ்ந்த கருத்துக்கள் கொண்டவை. தர்க்கம், வியாகரணம், மீமாம்ஸை முதலிய மற்ற நூல்களில் பயிற்சி யுள்ளவர் களுக்கு மட்டும் எளிதில் அறிந்துகொள்ளத் தக்கவை.

பர்த்திருஹரி கூறுகிருர்.

आयुर्वर्षशतं नृणां परिमितं रात्रौ तदर्धं गतं
तस्यार्धस्य परस्य चार्धमपरं बालत्ववृद्धत्वयोः ।
शेषं व्याधिवियोगदुःखसहितं सेवादिभिर्नीयते
जीवे वारितरंगचञ्चलतरे सौख्यं कुतः प्राणिनाम् ॥
(वैराग्यशतकम् श्लोकः 49)

ஆயுர்வர்ஷசதம் ந்ருணும் பரிமிதம் ராத்ரௌ ததர்த்தம்கதம்
தஸ்யார்த்தஸ்ய பரஸ்ய சார்த்தமபரம் பாலத்வவ்ருத்தத்வயோ:
சேஷம் வ்யாதிவியோகதுக்கஸஹிதம்ஸேவாதிபிர்நீயதே
ஜீவே வாரிதரங்கசஞ்சலதரே ஸௌக்யம்குத; ப்ராணினும்:

காலத்தின் கொடிய நிலையினல் பூர்த்தியான ஆயுள் ஏற்படாமலும், வியாதி, துன்பம் முதலிய பற்பல இடையூறுகளாலும், புத்தியின் திறமைக் குறைவினுலும் மற்ற நூல்களில் பயிற்சி ஏற்படா மல் ஸமஸ்கிருத பாஷையில் அற்பமான அறிவு உடையவர்களுக்கும் உண்மையான ஆத்மஞானம் உண்டாக வேண்டுமென்று கருதி கருணை நிரம்பிய

அப் பரமாசிரியாள் பிரகரண கிரந்தங்கள் என்ற சில நூல்களை இயற்றியுள்ளார்கள். அவைகளில் விவேக சூடாமணி என்ற நூலில் கூறியுள்ளார்.

देहेऽहमित्येव जडस्य बुद्धिः

தேஹேऽஹமித்யேவ ஜடஸ்யபுத்தி :

## லோகாயத மதம்

தேகமே ஆத்மா என்று அறிவிலிகள் கருதுகிறார்கள். இது அறிவிலிகளின் சுபாவமே யாகும். இந்தப் புத்திக்கு கல்விப்பயிற்சி அவசியமில்லை. எழுத்துக்களைக் கற்று அறிதலும் அவசியமற்றது. **लोके** உலகத்தில் **आयतम्** பரவியுள்ளது. என்று பொருள். இதற்கு தனிப்பட்ட முறையில் ஆசிரியரும் அவசியமில்லை- தவத்தின் அல்லது விசாரம் செய்தலின்குறைவினல் இந்தபுத்திஉண்டாகிறது. மனிதன் தனது ஞானத்தை வளர்த்துக்கொள்ள உரிமையுள்ளவனுகையால் ஞானம் வளருகையில் லோகாயத புத்தியும் நீங்குகிறது.

மேலும், இப்பாரத பூமியின் விசேஷத்தை கவனியுங்கள். ஒருவன் மிக்க சுகவாசியாக இருப்பதைக் கண்டு ஆனந்தமடையும் ஜனங்கள், 'அவன் பாக்கியவான் புண்ணியசாலி' என்று எண்ணுகின்றனர். அவ்வாறு கருதுதல் கல்விப் பயிற்சி இல்லாத மனிதனிடத்திலும் காணப்படுகிறது. இது சகஜமாக இருப்பது எல்லோருக்கும் அனுபவ சித்தமான விஷயம். இத்தகைய வியவ

ஹாரமே "சுகத்தை அனுபவிக்கும் தேகம், ஆத்மா அல்ல" என்பதற்கு நிரூபணமாகும். ஆகவே பாரத பூமி ஆஸ்திக்கியம் விளங்கும் பூமி என்பது நிச்சயம்.

மேலும்,

सर्वानर्थप्रथमकरणे सर्वभावैर्जिहास्ये
देहे मोहो यदि परिणतः पोषणीयो मयेति ।
आस्तामेवं वपुरिदमिवागामि चास्माकमेवे
त्येषाप्यास्तां मतिरिति परं धर्मशास्त्रेषु घोषः ॥

ஸர்வாநர்த்தப் ப்ரதமகரணே ஸர்வபாவைர்ஜிஹாஸ்யே
தேஹே மோஹோ யதி பரிணத: போஷணீயோ மயேதி
ஆஸ்தாமேவம் வபுரித மிவாகாமி சாஸ்மாக மேவே
த்யேஷாப்யாஸ்தாம் மதிரிதி பரம் தர்ம சாஸ்த்ரேஷு கோஷ:

— (நீலகண்ட தீக்ஷிதர்)

இந்த தேகம் எல்லாவித அநர்த்தங்களுக்கும் முதல் காரணமாக இருக்கிறது. இதற்குள் இருக்கும் ஒவ்வொரு பொருளையும் வியர்வை முதலிய குணங்களையும் கவனிக்கையில் அருவருப்பு உண்டாகிறது. இத்தகைய தேகத்தில் 'நான்' என்ற அபிமானம் ஏற்பட்டு இதனை 'நான் காப்பாற்ற வேண்டும்' என்ற உறுதியான எண்ணம் உண்டாகிறது. அத்தகைய அபிமானம் இருக்கட்டும். ஆனால், இதுபோலவே வேறு ஒரு சரீரம் உண்டாகப் போகிறது என்று தான் தர்ம சாஸ்திரங்களில் கோஷிக்கும் வசனம் என்ற நிச்சயமும் கொள்ளுதல் வேண்டும்.

## வித்வான்களுடைய அறிவு.

देहे च जीवे विदुषस्त्वहं धीः

தேஹே ச ஜீவே விதுஷஸ்த்வஹம் தீ :.

என்பது பரமாசாரியாளுடைய வசனம்.

படித்தவனுக்கு தேகத்திலும், ஜீவனிடத்திலும் 'நான்' என்ற புத்தி இருக்கிறது.

ஆனால், ஜடமான தேகத்தையும் சேதனனை ஜீவனையும் 'ஆத்மா' என்று உணருதல் உண்மையான அறிவாகாதன்றோ! ஜடத்திற்கு சேதனத் தன்மையும் சேதனத்திற்கு ஜடத்தன்மையும் விரோதமானது. ஆகையால், அவைகளிரண்டினையும் 'நான்' என்று உணர்ந்தவன் வித்வானாயினும் அவனுடைய வித்தை முக்தி சுகத்திற்குக் காரணமாகாது.

वाग्वैखरी शब्दझरी शास्त्रव्याख्यान कौशलम् ।
वैदुष्यं विदुषां यत्तद्भुक्तये न तु मुक्तये ॥

வாக்வைகரீ சப்தஜரீ சாஸ்த்ரவ்யாக்கியான கௌசலம்
வைதுஷ்யம் விதுஷாம் யத்தத் புக்தயே நது முக்தயே.

— ஆசாரிய வசனம் – விவேக சூடாமணி.

பேச்சின் திறமை பல நூல்களின் பொருள் விளக்கும் சாமர்த்தியம் முதலியவை அந்தந்த வித்வான்களுக்கு வாழ்க்கையில் சுகத்திற்கு காரணமாகுமேயன்றி பேரானந்தமும் துக்கங்களின் விடுதலையுமாகிய முக்தி சுகத்தை அளிக்காது.

## ஆத்ம ஞானம்.

**विवेकविज्ञानवतो महात्मनो**
**ब्रह्माहमित्येव मतिः सदाऽऽत्मनि ॥**

**விவேக விக்ஞானவதோ மஹாத்மநோ**
**பிரம்மாஹமித்யேவ மதி: ஸதாத்மநி.**

என்ற பகுதியால் உண்மையான 'ஆத்மஞ்ஞானி யார்' என்பதை விளக்குகிருர்.

அழியக்கூடிய இப்பிரபஞ்சப் பொருள்களை யும் அழிவற்ற ஆத்மாவையும் நூல்களால் அறிந்து கொள்வதுடன் தனது அனுபவத்தாலும் உணர்ந்து 'ஆத்மா ஒன்று தான் அழிவற்றது' என்ற அறிவை உறுதி செய்துகொள்ள வேண்டும். தக்க நல்ல யுக்திகளால் அவ்வறிவு நிலைத்தால் அவன் 'மகான்' என்று கூறப்படுவான். அவருடைய அறிவு '**ब्रह्मैवाहम्**' 'பிரம்மைவாஹம்' என்ற உறுதிநிலை பெற்றதாகவும் இருக்கும். நான் பிரம்மம் தான். பிரம்மவஸ்து தான் ஜீவத்தன்மையை அடைந்துள் ளது என்று விளக்கும். அஹமேவ பிரம்மா–நான் தான் பிரம்மவஸ்து என்ற ஞானம் தவறு. கர்வத்தையும் காண்பிக்கிறது.

### ஆத்ம ஞானத்தின் சாதனங்களும் பயனும்.

[வேதம் பிரமாணம்]

**श्रुतिप्रमाणैकमतेः स्वधर्म**
**निष्ठा तयैवात्मविशुद्धिरस्य ।**
**विशुद्धबुद्धेः परमात्मवेदनं**
**तेनैव संसारसमूलनाशः ॥**

**(विवेकचूडामणिः श्लोकः 150)**

ச்ருதிப்ரமாணைகமதே; ஸ்வதர்மம்
நிஷ்டா தயைவாத்மவி சுத்திரஸ்ய
விசுத்தபுத்தே: பரமாத்ம வேதனம்
தேனைவ ஸம்ஸார ஸமூல நாச:.

ஆத்மஞானம் உண்டாவதற்கு வேதத்தையே முக்கிய பிரமாணமாகக் கொள்ளவேண்டும். தர்மம், முதலியவைகளை வேதங்கள் போதிக்கின்றன. தனது யுக்திகளால் தர்மா தர்மங்களை தீர்மானம் செய்தல் கூடாது. மனுஷ்யனுடைய யுக்திகளுக்கு வியவஸ்தை இல்லை. 'तर्काप्रतिष्ठानात्' 'தர்க்காப்ர திஷ்டானுத்' என்று வியாஸ முனிவருடைய சூத்திரம். உதாரணமாக — ஒருவனுக்கு மாமிஸபக்ஷணத்தில் ருசி ஏற்பட்டால் அவன் 'பிராணிகளை கொல்லக்கூடாது' என்ற நியமத்திற்கு கட்டுப்படுவதில்லை. விலங்கு, பறவை முதலியவைகளைக் கொல்வதாயின் மனிதனை ஏன் கொல்லக்கூடாது. ஏழ்மையால் வருந்துகிற மனிதனைக் கொன்றுவிடுவதால் அவனுடைய வறுமை நோய்க்கு முற்றுப் புள்ளி. தனக்கு வேண்டிய மாமிஸமும் கிடைக்குமல்லவா? என்பது போல யுக்திவாதங்களைக் கூறி மனுஷ்ய வதையில் முயன்ருல் உலகத்தில் குழப்பமதிகமாகிவிடும். ஆகையால் மனிதன் மனிதனைக் கொல்லக்கூடாது என்ற நல்லெண்ணத்தை ஒவ்வொருவனும் கைக்கொள்ளவேண்டும். இந்த நியமம் மனிதனைக் கட்டுப்படுத்துகிறது. அதனுல், உலகத்தில் அமைதி நிலவுகிறது. அதுபோலவே, நாம் வேதங்களுக்குக் கட்டுப்பட்டு, அவைகளையே

முக்கிய பிரமாணங்களாகத் தீர்மானம் செய்து கொண்டு அவைகளுக்கு அனுகூலங்களான யுக்தி களில் மனம் செலுத்தவேண்டியதவசியம்.

**ஸ்வதர்மங்களைச் செய்தல்.**

வேதங்களை முக்கிய பிரமாணமாகத் தீர்மா னம் செய்துகொள்வதுடன் அவைகளில் கூறும் ஸ்வதர்மங்களைக் கைவிடாது செய்யவேண்டும். தர்மங்கள்-கடமைகள் அநேகங்களிருக்கின்றன. எல்லோருக்கும் எல்லாம் கடமையல்ல. அவனவ னுக்கு உரிய கடமைகளை எவ்விதத்திலும் செய்தே ஆகவேண்டும். அன்னியனுடைய தர்மத்தை வேறொருவன் செய்யக்கூடாது.

**स्वकर्मणा तमभ्यर्च्य सिद्धिं विन्दति मानवः ।**

ஸ்வகர்மணா தமப்யர்ச்ய ஸித்திம் விந்ததி மானவ :

என்று பகவத் கீதை.

மனிதன் தனக்குரிய கடமையைச் செய்து பக வானை சந்தோஷிக்கச் செய்வதால் சுகத்தை அடை கிறான் என்று பொருள்.

**श्रेयान् स्वधर्मो विगुणः परधर्मात्स्वनुष्ठितात्**

ச்ரேயான் ஸ்வதர்மொ விகுண: பரதர்மாத்ஸ்வனுஷ்டிதாத்

என்று கீதா வசனம். பிறனுடைய கடமையை நன்றாகச் செய்வதைக் காட்டிலும் சில அங்கங்கள் குறைந்தபோதிலும் ஸ்வதர்மத்தைச் செய்தலே சிறந்தது. அதுதான் நன்மைக்குக் காரணம்.

## மனச்சுத்தி.

சாஸ்திரங்களாலும், மகான்களுடைய உபதேசங்களாலும் ஆசாரங்களாலும் சந்தேஹமின்றித் தனது கடமைகளைத் தெரிந்துகொண்டு தவருது செய்தால் மனம் சுத்தமடைகிறது. ரஜோகுணமும், தமோகுணமும் மனதிலிருந்து விலகுகின்றன. சுத்த ஸத்வ குணம் மட்டும் மனதில் நிலைக்கிறது. சுத்தமான மனதில் ஆசாரியருடைய உபதேசம் சீக்கிரம் பயனளிக்கிறது. ஆசார்ய பக்தி ஞானத்தின் உதயத்திற்கு இன்றியமையாதது. அந்த ஆசார்ய பக்தி, ஞானத்தை அளிப்பதுடன் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மனிடத்தில் நிகரற்ற பக்தியை நிலைக்கச் செய்கிறது.

**वासुदेवः सर्वमिति स महात्मा सुदुर्लभः**

வாஸுதேவ : ஸர்வமிதி ஸ மகாத்மா ஸுதுர்லப :

என்று கீதா வசனம். உலகம் யாவும் வாசுதேவனே என்று உணருபவன் மகாத்மா. அத்தகையவன் உலகில் தோன்றுதல் துர்லபம் என்பது அதன் பொருள்.

## சித்த சுத்தியின் பயன்.

ஸத்வகுணம் மேலோங்கிய மனதில் ஆசார்யருடைய உபதேசமும் பயனளிக்க பரம்பொருளை அறிந்துகொள்கிறன். அந்த ஆத்ம ஞானத்தால் பல துன்பங்களுக்குக் காரணமாகிய ஸம்ஸாரபந்தம் வேருடன் அறுபடுகிறது. நித்யானந்தமாகிய முக்தி சுகத்தையும் ஜீவன் அடைகிறன்.

## 2-வது அத்தியாயம்

### மனிதனுடைய கடமை.

भगवद्गीता किंचिदधीता
गंगाजल लव कणिका पीता ।
सकृदपि येन मुरारिसमर्चा
क्रियते तस्य यमेन न चर्चा ॥

பகவத்கீதா கிஞ்சித்தீதா
கங்கா ஜலலவ கணிகா பீதா.
ஸக்ருதபி யேந முராரி ஸமர்ச்சா
க்ரியதே தஸ்ய யமேந ந சர்ச்சா,

என்று பகவத்பாதாளுடைய வசனம்.
(மோஹமுத்கரம்)

பிறந்தவன் இறப்பதும், இறந்தவன் பிறப்பதும் நிச்சயமாயினும் பிறவிக்கடலிலிருந்து தன்னைக் காப்பாற்றிக் கொள்வதற்கு தக்க உபாயங்களை மேற்கூறிய செய்யுளில் கூறியுள்ளார்.

गन्तव्योऽध्वा सकलदुरवस्थान संपातभूमि
र्गत्वा दृश्यस्त्रिभुवन जनायुष्कलान्तः कृतान्तः ।
द्रष्टा लभ्या निरयजनिता यातना नैकभेदा
विस्मृत्येदं निखिलमपि तु व्यर्थमायुर्नयामः ॥
(शान्तिविलासः श्लोकः 17)

கந்தவ்யோத்வா ஸகலதுரவஸ்தான ஸம்பாதபூமிர்
கத்வா த்ருச்யஸ்த்ரிபுவனஜனாயுஷ்கலாந்த ; க்ருதாந்த :
த்ருஷ்டவா லப்யா நிரயஜநிதா யாதநா நைகபேதா.
விஸ்ம்ருத்யேதம் நிகிலமபி து வ்யர்த்தமாயுர்நயாம :

மனுஷ்யன் இவ்வுலகில் பற்பல இடங்களில் தனது இஷ்டப்படி பிரயாணம் செய்வதுபோல் இந்த உடலை நீக்கியபின் பிரயாணம் செய்ய வேண்டிய மார்க்கம் ஒன்று உண்டு. அந்த மார்க்கம் எல்லாவித கஷ்டங்களும் துன்பங்களும் நிரம்பிய இடமாகும். அந்த வழியில் சென்றபின் இந்த ஜீவன் ஸந்திக்கவேண்டியவர் ஒருவர் இருக்கிறார். அவர் மூவுலகங்களிலுமுள்ள பிராணிகளுடைய ஆயுளின் வருஷம், மாதம். நாள், நாழிகை விநாடி என்பவைகளைக் கணக்கிட்டு ஆயுளின் முடிவிற்குக் காரணமானவர்; அவரைக் கண்டபின் அவரால் நியமிக்கப்பட்ட பற்பல நரக துக்கங்களை தனது பாவச் செயல்களுக்குப் பயனாக அனுபவித்தே யாகவேண்டும். அவை யாவற்றையும் மறந்து நமது ஆயுளை வீணாக கழிப்பது மிக்க ஆச்சரியம் மட்டுமல்ல, வருந்தத்தக்க காரியமாகும். தத்தமது நலங்களை தாமே இழப்பது வருந்தத்தக்கதன்றோ! என்று நீலகண்ட தீக்ஷிதர் கூறிய செய்யுளின் பொருள். மேலும், அவர் கூறிய செய்யுள்.—

**छाया तोयं वसनमशनं वाहनं दीपिका वा**<br>
**क्रेतुं यस्मिन् न खलु सुलभं किंचिदप्येषु मर्त्यैः ।**<br>
**तस्मिन् दूरे पथि तनुभृतां सर्वथैवाभिगम्ये**<br>
**प्रस्थानार्हं कमपि तु विधिं घस्मरा न स्मरामः ॥**

**(शान्तिविलासः)**

சாயா தோயம் வஸனமசனம் வாஹனம் தீபிகா வா<br>
க்ரேதும் யஸ்மின் ந கலு ஸுலபம் கிஞ்சிதப்யேஷு மர்த்யை:<br>
தஸ்மின் தூரே பதி லநுப்ருதாம் ஸர்வதைவாபிகம்யே<br>
ப்ரஸ்தா நார்ஹம் கமபிது விதிம் கஸ்மரா ந ஸ்மராம:

வெய்யிலுக்குத் தங்குமிடமாகிய நிழலுள்ள விடுதியாவது, தாகத்திற்குத் தண்ணீராவது, உடுக்கத் துணியாவது, பசிக்கு உணவாவது, பிரயாணத்திற்கு உரிய வண்டி முதலிய வாஹனமாவது, இருளுக்கு தீபமாவது, வேறு எவ்வித உதவிப் பொருளாவது எந்த தேசத்தில் விலைக்கு கிடைக்காதோ, அந்த தேசம் மிக தூரத்திலுள்ளது. போகவேண்டாம் என்ற தீர்மானம் நாம் செய்தபோதிலும் அந்த தேசப் பிரயாணத்தை தவிர்க்க முடியாது. புண்ணியம் ஒன்றுதான் அந்தப் பிரயாணத்தை தவிர்க்கும், அங்குள்ள துன்பங்களை நீக்கவும் வன்மைகொண்டது. அந்த விஷயத்தை மறந்துவிடுகிறோம். காரணம் யாதெனில், சிற்றின்பங்களுக்கு ஈடுபட்டு உடல் வளர்ச்சியும் இந்திரியங்களை திருப்தி செய்தலும் பெரிது என்றெண்ணி போக சுகங்களுக்கு அடிமைபடுதலேயாகும். இத்தகைய துக்கம் ஏற்படாமலிருப்பதற்கு ஸ்ரீ பகவத்பாதாசார்யர் கூறியுள்ள உபாயங்களாவன:—

(1) भगवद्गीता किंचिदधीता (2) गंगाजललवकणिका पीता।
(3) सकृदपि येन मुरारि समर्चा क्रियते तस्य यमेन न चर्चा॥

பகவத்கீதா கிஞ்சித்தீதா கங்காஜலலவகணிகா பீதா
ஸக்ருதபி யேந முராரி ஸமர்ச்சா க்ரியதே தஸ்ய யமேந ந சர்ச்சா,

எவனால் சிறிதாவது ஒரு அத்தியாயமாவது பகவத்கீதை பாராயணம் செய்யப்படுகிறதோ, கங்கா: ஜலம் சிறிதாவது பானம் செய்யப்

பட்டதோ, ஒரு தடவையாவது பகவானுக்கு ஆரா தனை செய்யப்படுகிறதோ, அவன் விஷயத்தில் யமன் விசாரணை செய்வதில்லை. அவனுக்கு யமனிடமிருந்து பயம் இல்லை.

## தீர்த்தயாத்திரையின் பயன்

கங்கை முதலிய புண்ணிய தீர்த்தங்களுக்கு யாத்திரை செய்பவன் மகான்களை சந்தித்து அவர்களுடன் ஸம்பாஷணை செய்யும்படி ஏற்படு கிறது: மகான்கள் மூலமாக பரமனுடைய மகிமா திசயங்களைக் கேட்டு பக்தி நிலவ முகுந்தனை சேவிக்கும் சுபாவம் ஏற்படுகிறது. முகுந்தன் முக்தியை யளிப்பவன்.

## தீர்த்தயாத்திரை முதலியவை ஸாத்விகங்களாக இருத்தல் சிறந்தது.

தீர்த்த யாத்திரை மனச்சுத்திக்குக் காரண மானது. அவ்வாறு மனச்சுத்தியை அளிக்கும் தீர்த்தயாத்திரை தான் ஸாத்வீகமான யாத்திரை. ஆடம்பரத்துடன் செய்யப்படும் யாத்திரை உண் மையும் உறுதியுமான பயனை அளிப்பதில்லை. அத் தகைய தீர்த்தயாத்திரை நேரிடாவிடினும் கங்கா ஜலத்தைப் பானம் செய்தல் மிக்க அவசியம்.

## யக்ஞங்களில் ஞானயக்ஞம் சிறந்தது

द्रव्ययज्ञास्तपोयज्ञा योगयज्ञास्तथापरे ।
स्वाध्यायज्ञानयज्ञाश्च यतयः संशितव्रताः ॥
(गीता अध्याय 4 श्लोक 28)

த்ரவ்ய யக்ஞாஸ்தபோயக்ஞா யோகயக்ஞாஸ்தமாபரே.
ஸ்வாத்யாய ஞானயக்ஞாச்ச யதய: ஸம்சிதவ்ரதா:

என்று யக்ஞங்கள் பலவிதங்களாக கூறப்பட்டுள்ளன. அவைகளில் ஞானயக்ஞம் சிறந்தது. பகவத்கீதையின் பாராயணம் ஞானயக்ஞமேயாகும்.

**अध्येष्यते च य इमं धर्म्यं संवादमावयोः ।**
**ज्ञानयज्ञेन तेनाहमिष्टः स्यामिति मे मतिः ॥**

அத்யேஷ்யதே ச ய இகம் தர்ம்யம் ஸம்வாதமாவயோ:
ஞானயக்ஞேன தேநாஹ மிஷ்ட: ஸ்யாமிதி மே மதி:

அர்ஜுனா! தர்மத்திலிருந்து தவறாத நமது இந்த ஸம்பாஷணையை எவன் பொருளை அறிந்து கவனத்துடன் பாராயணம் செய்கிறானோ அவன் ஞானயக்ஞத்தைச் செய்து என்னை ஸந்தோஷிக்கச் செய்தவனாகிறான் என்பது என்னுடைய தீர்மானம்.

## ஸாத்விகம் சிறந்தது.

மேற்கூறிய உபாயங்கள் ஸாத்வீகங்களாக இருக்கவேண்டும். ராஜஸங்களாகவோ,தாமஸங்களாகவோ இருந்தால் சிறந்த பயனை அளிக்காது.

**यत्तु कामेप्सुना कर्म साहंकारेण वा पुनः ।**
**क्रियते बहुलायासं तद्राजसमुदाहृतम् ॥**
**अनुबन्धं क्षयं हिंसामनवेक्ष्य च पौरुषम् ।**
**मोहादारभ्यते कर्म तत्तामसमुदाहृतम् ॥**

(गीता अध्यायः 18 श्लोक 24-25)

யத்து காமேப்ஸுநா கர்ம ஸாஹங்காரேணவா புந:
க்ரியதே பஹுளாயாஸம் தத்ராஜஸமுதாஹ்ருதம்.
அனுபந்தம் க்ஷயம் ஹிம்ஸாமனபேக்ஷ்ய ச பௌருஷம்
மோஹாதாரப்யதே காம யத் தத்தாமஸமுதாஹ்ருதம்.

பயனில் விருப்பத்துடனும் நான் என்ற அகங்காரத்துடனும் அதிக சிரமத்தைக் கொடுப்பதுமான காரியம் யாதோ, அது ரஜோகுண சம்பந்தமுள்ளது என்று கூறப்படுகிறது. பயனையும், அழிவையும், பிறருக்கு ஹிம்ஸையையும், தனது சக்தியையும் யோசனை செய்யாமல் மூடத்தனமாக செய்யும் காரியம் தாமஸம் என்று கூறப்படுகிறது.

ஆகவே, கீதாபாராயணம் முதலியவைகளும் கர்வமின்றி சுத்த ஸத்வகுணத்தையே பிரதானமாக கொண்டவைகளாக இருக்கவேண்டும்.

3 வது அத்தியாயம்.

### குலத்தின் பெருமிதம்.

இவ்வுலகிலுள்ள மனிதன் ஒவ்வொருவனும் தான் செய்யும் காரியங்கள் சிறந்தவை என்றும், தனது முன்னோர்களைப் பின்பற்றி அக்காரியங்களைத்தான் செய்வதாகவும் எண்ணிக்கொண்டு அம் முன்னோர்களின் பெருமிதத்தைப் புகழ்ந்து கொண்டு அவர்களுடைய வழி நேர்மையுள்ளதென்று கூறுதலும் சுபாவமாக இருக்கிறது. நமது முன்னோர்களின் தவத்தின் சக்தி, காலம் எவ்வளவு கடந்தபோதிலும் ஞாபகத்தில் இருந்துகொண்டே இருக்கிறது. அவர்களுடைய பூத சரீரம் நீங்கிய போதிலும் கீர்த்தி சரீரம் இக்காலத்தும் அழிவற்ற

தாக விளங்குகிறது. நீலகண்ட தீக்ஷிதர் கூறி யுள்ளார்:—

> येनाचान्ताः सलिलनिधयो येन सृष्टा प्रतिद्यौः
> शास्त्राण्यस्त्राण्यपि कबलितान्येकया यस्य यष्ट्या ।
> कस्तादृक्षः प्रभवतु जनो देव भूदेव वर्गे
> कालः कीटानिव कबलयामास तानप्ययत्नम् ॥
> (शान्तिविलासः 37 श्लो)

யேநாசாந்தா : ஸலிலநிதயோ யேந ஸ்ருஷ்டா ப்ரதித்யௌ :
சஸ்த்ராண்ஸ்த்ராண்யபி கபளிதான்யேகயா யஸ்ய யஷ்ட்யா :
கஸ்தாத்ருக்ஷ : ப்ரபவது ஜநோ தேவபூதேவ வர்கே
கால : கீடாநிவ கபளயாமாஸ தாநப்யயத்னம்.

அகஸ்த்ய முனிவர் சமுத்திர ஜலத்தைக் குடித்தார் என்பது அவருடைய தவத்தின் நிகரற்ற வன்மையைக் காட்டுகிறது. விசுவாமித்திர முனிவர் தனிமையான ஸ்வர்க்கலோகத்தை சிருஷ்டித்தார். ஆனால், வசிஷ்டமா முனிவரிடம் பகைமை புத்தியுடன் செய்ததால் அவருடைய காரியங்களுக்குப் பல விக்னங்கள் நேர்ந்தன. மாமுனிவராகிய வசிஷ்டர் தனது தவச்சக்தியைக் காண்பித்தது மிக்க ஆச்சரியமன்றோ! விசுவாமித்திர முனிவர் எய்த அஸ்த்திரங்களையும் சஸ்த்திரங்களையும் தான் நாட்டிய ஒரு பிரம்மதண்டத்தால் விழுங்கினார். அந்தப் பிரபாவம் வர்ணிக்க முடியாதது. விண்ணுலகத்திலும், மண்ணுலகத்திலும் அத்தகைய சக்தி மிகுந்த பெரியார்கள் எவர்களிருக்கிறார்கள்? ஆயினும், காலம் அவர்களையும் அழித்து விட்டது. அவர்களுடைய கீர்த்தி இப்பொழுதும் அழியாமல் விளங்குகிறது.

## வியாஸர் முதலியவர்களின் பிரபாவம்.

வேதங்களைப் பகுத்து ருக்கு, யஜுஸ், ஸாமம் அதர்வம் என்ற பெயர்களுடன் சிஷ்யர்களுக்கு உபதேசம் செய்து, மகாபாரதம் முதலிய இதிகாஸங்களையும் பதினெண் புராணங்களையும் இயற்றிய மாமுனிவராகிய வியாஸர் எங்கே?

'यद्वै किंच मनुरवदत् तद्भेषजम्' 'யத்வை கிஞ்ச மனுரவதத் தத்பேஷஜம்' = மனு கூறிய வசனம். ஔஷதம் என்று மனுவின் மகிமை வேதத்தில் கூறப்பட்டுள்ளது. அவர் எங்கே? ஆத்மஞ்ஞானியாயினும் இல்லற வாழ்க்கையில் தனது தர்மங்களைக் கைவிடாது அனுஷ்டானம்செய்தவர் யாக்ஞவல்க்ய முனிவர். அவர் எங்கே? அவர்கள் எல்லோரும் மறைந்தனர். ஆனால் அத்தகையர்கள், தந்தை புதல்வனுக்கு ஹிதம் உபதேசம் செய்வது போல உலகங்களுடைய நன்மைக்காக சிறந்த நூல்கள் இயற்றினர். அவர்கள் எல்லையில்லாக் கருணைக் கடல்கள் என்று அறிகிறோம். உலகங்களுக்கு உற்ற உறவினர் என்பதும் உறுதி. நாமோவெனில், அளவு கடந்த இருள் மலைகள். ஆயினும், நம் குலத்தோர்கள் சிறந்தவர்கள் என்ற அபிமானம் நமக்கு இருக்கிறது. இந்த விஷயத்தையும் நீலகண்ட தீக்ஷிதர் கூறியுள்ளார்.

को नु व्यासः क इव मनुः कोऽन्वसौ याज्ञवल्क्यः
यैरुद्दिष्टं हितमसकृदस्मासु पित्रेव पुत्रे ।
पश्यामस्तान्निरुपधिकृपासागराल्लोकबन्धून् ॥
पश्यामोऽस्मान्निरवधितमःक्ष्माधरान्ब्रह्मबन्धून् ॥

(शान्तिविलासः 24 श्लोकः)

கோநு வியாஸ : கஇவ மநு : கோந்வஸெள யாக்ஞவல்க்ய :
யைருத்குஷ்டம் ஹிதமஸக்ருதஸ்மாஸு பித்ரேவ புத்ரே.
பச்யாமஸ்தான் நிருபதி க்ருபாஸாகரால் லோகபந்தூன்
பச்யாமோசஸ்மான் நிரவதிதம : க்ஷமாதரான் பிரம்ம பத்தூன்.

## மாத்ருபக்தி-பித்ருபக்தி-ஆசார்ய பக்தி

அந்த மாமுனிவர்கள் காண்பித்த நல்லவழிகள் தாய் தந்தையர் காண்பிக்கும் நல்வழிகளுக்கு சமமானவை என்பதில் சந்தேகமில்லை. ஆகையால் தாய் தந்தையர்களிடமும் ஆசார்யரிடமும் பக்தி முக்கியமானது.

பற்பல நற்செயல்களைச் செய்து மகான்களின் அருளைப் பெறுவதற்குரிய உடலைக் கருவில் காப்பாற்றி அதன் பாதுகாப்பிற்கும் போஷணைக்குமாக தன் நலம் கருதாமல் கருச்செல்வம் பெருஞ்செல்வம் என்று தூய அன்பு பாராட்டி குழந்தைப் பருவத்தில் சீராட்டிப் பாராட்டுவதன்றி அம்மா, அப்பா முதலிய பேச்சுக்களை முதல் முதலாக உபதேசம் செய்த சிறந்த தெய்வமன்றோ அன்னை.

தனது புதல்வன் தன்னைக்காட்டிலும் மேதாவியாகவும் புகழ்ச்செல்வமுடையவனுகவும் வாழ்க்கை நடத்தவேண்டுமென்று கருதி கல்விப்பயிற்சி முதலியவைகளுக்குத் தக்க அனுகூலங்களைச் செய்து புதல்வனுடைய உயர்வே தனது உயர்வு என்ற உறுதிகொள்பவர் தந்தை.

புதல்வனிடம் போலவும் சிற்சில சமயங்களில் புதல்வனைக் காட்டிலும் மேலான அன்புட

னும் ஆர்வத்துடனும் அழிவற்ற கல்விப் பொருளைத் தானம் செய்து களிப்படைகிறவர் ஆசிரியர். அழியக்கூடிய உடலை யளிப்பவர்கள் தாய் தந்தையர்கள். அழிவற்ற கல்விப்பொருளை யளிப்பவர்கள் ஆசிரியர். ஆகையால் இம் மூவர்களிடமும் பக்தி மிக்க அவசியம்.

'मातृदेवो भव। पितृदेवो भव। आचार्यदेवो भव।'
(तैत्तिरीयोपनिषत्)

'மாத்ருதேவோ பவ. பித்ருதேவோ பவ. ஆசாரியதேவோபவ' என்று தைத்திரீயோபநிஷத்தில் கூறப்பட்டுள்ளது.

### கற்ற கல்வியின் அப்பியாஸம்.

'स्वाध्यायप्रवचनाभ्यां न प्रमदितव्यम्'
(तैत्तिरीयोपनिषत्)

'ஸ்வத்யாய ப்ரவசனுப்யாம் ந ப்ரமதிதவ்யம்.'

கல்வியை கற்கவேண்டிய தவசியம்போல் கற்ற கல்வியை அப்பியாஸம் செய்யவேண்டியதும் முக்கியம் என்பது கருத்து.

'गुरोरधीतं गुरवे निवेदनीयम्'

'குரோரதீதம் குரவே நிவேதநீயம்

என்ற நியாயமாக = குருவினிடம் நன்றி காண்பிப்பதற்கு அவரிடமிருந்து கற்ற கல்வியை அவருக்கே அர்ப்பணம் செய்தல், என்று எண்ணமல், குருவினிடமிருந்து கற்ற கல்வியைக் கைவிடாது அப்பியாஸம் செய்து வரவேண்டும். அப்படிச் செய்வதால் முனிவர்கடன் நீங்குகிறது.

ஆகவே, "ஆஸ்திக்கியம் இல்லாத காலம் இது." என்று அதைரியமடையாமல், நமது நன்மையை உத்தேசித்து முன்னோர்கள் காண்பித்த நல்ல மார்க்கத்தைப் பின்பற்றவேண்டும். நாஸ்திக்கியமும், ஆஸ்திக்கியமும் இருளும் பிரகாசமும் போல் அநாதிக காலத்திலிருந்தே உள்ளவை. நாஸ்திக்கியத்திற்கு அஞ்சவேண்டாம். நமது குலத்தின் பெருமிதத்தை ஞாபகத்தில் வைத்துக் கொண்டு ஆஸ்திக்கிய மார்க்கத்தை ஊக்கத்துடன் பரிபாலனம் செய்யவேண்டும். பக்தியுடன் இருக்கவேண்டும்.

பகவத் பக்தியே எல்லா நன்மைகளையும் பெருக்குவதாகும்.

---

## 4-வது அத்தியாயம்.

### மனிதனுக்கு விசாரசக்தி விசேஷம்.

பகவான் சிருஷ்டித்துள்ள பிராணிகளில் சிலவைக்கு சரீர பலம் அதிகம். சிலவற்றிற்கு புத்தி சக்தி அதிகம் என்றிவ்வாறு பல விசேஷங்கள் உண்டு. மானுக்கு ஓடும் வன்மை அதிகம். யானைக்கு சரீரபலம் அதிகம். ஒவ்வொரு விஷயத்திலும் மாறுபாடு இருந்தபோதிலும் பகுத்தறிவில் ஓரளவு எல்லாப் பிராணிகளுக்கும் ஸமத்துவமுண்டு. பசும்புல்லைக் கையில் ஏந்தி கூப்பிடுகிற மனிதனைக்கண்டு பசுக்கள் தமக்கு ஆகாரம் கிடைக்குமென்று நம்பிக்கையுடன் அவனுக்கருகில் செல்லுகின்றன. கையில் தடியை வைத்தவனைக் கண்டு அஞ்சி தூரத்தில் செல்கின்றன். அது

போலவே, கல்வி கற்ற அறிவுள்ள மனிதனும் தன்னை உபசரிக்கும் ஜனங்களைக் கண்டு ஸந்தோஷத்துடன் அவர்களை அணுகுகிறான். அவமதிக்கும் ஜனங்களைக் கண்டு தூரத்தில் செல்கிறான். இந்த விவேகம் மனிதனுக்கும் விலங்கு முதலியவைகளுக்கும் சமமாக இருப்பதாயினும், விசாரம் செய்யும் சக்தி மனிதனுக்கு அதிகமாக இருக்கிறது. "நான் யார்? துக்கத்தின் காரணம் யாது? சுகம் உண்டாவது எப்படி?" என்பவைகளை நன்கு விசாரம் செய்து உண்மையைத் தெரிந்துகொள்ள வல்லமைகொண்டவன் மனிதன். அந்த அறிவைப் பெற்று தன்னுடைய நன்மைக்குரிய செயலாற்றும் வன்மையும் மனிதனுக்கு உண்டு. மனிதன் தனது வாழ்க்கையில் சிறிதுநேரம்கூட செயலற்றவனாக இருப்பதில்லை. பிரக்ருதியின் குணங்களால் தூண்டப்பட்டு ஏதாவது காரியம் செய்துகொண்டே இருக்கிறான்.

न हि कश्चित् क्षणमपि जातु तिष्ठत्यकर्मकृत् ।
कार्यते ह्यवशः कर्म सर्वः प्रकृतिजैर्गुणै ॥

(गीता अध्याय: 3 श्लोकः 5)

நஹி கச்சித் க்ஷணமபி ஜாது திஷ்ட்யத்ய கர்மக்ருத்
கார்யதே ஹ்யவச : கர்ம ஸர்வ: ப்ரக்ருதிஜைர்குணை :

என்று பகவான் கீதையில் கூறியுள்ளார்.

### கெட்ட காரியங்களை விலக்குதல்.

पिशुनैः प्रकाममुदितां परस्य निन्दां श्रृणोति कर्णाभ्याम् ।
तेन परः किं म्रियते? व्यर्थं मनुजोऽतिपापभाग्भवति ॥

अनृतं परापवादं रसना वदति प्रतिक्षणं तेन।
परहानिर्लब्धा का? व्यर्थं मनुजोऽतिपापभाग्भवति ॥
(प्रबोधसुधाकरः श्लो 59-60)

பிசுநை: ப்ரகாமமுதிதாம் பரஸ்ய நிந்தாம் ச்ருணோதி கர்ணப்யாம்.
தேந பர: கிம் ம்ருயதே? வ்யர்த்தம் மனுஜோதிபாப பாக் பவதி.
அந்ருதம் பராபவாதம் ரஸனு வததி ப்ரதிக்ஷணம் தேந.
பரஹாநிர்லப்தா கா? வ்யர்த்தம் மனுஜோதி பாபபாக்பவதி.

கோட்சொல்லுகிறவர்களால் மிகவும் சந்தோஷத்துடன் கூறப்படும் பிறருடைய நிந்தையை மகிழ்ச்சியுடன் செவிகளால் கேட்கிறுன். அப்படிக் கேட்பதால் பிறனுக்கு மரணம் உண்டாகிறதா? இல்லை. அந்த நிந்தையைக் கேட்பதனுல் உண்டாகிற பாபத்தை மாத்திரம் அடைந்தவனுக ஆகிறுன்.

மனிதன் ஒவ்வொரு கணமும் பொய்யையும், பிறருடைய நிந்தனையையும் நாவினுல் கூறுகிறுன். அதனுல், பிறனுக்கு என்ன தீமை உண்டாகிறது? யாதொன்றுமில்லை. அப்படிச் சொல்கிறவன் பாபத்தை சம்பாதித்துக்கொள்கிறுனேயல்லாமல் வேறு ஒரு பயனும் அடைவதில்லை.

மேற்கூறியபடி புத்தியை உபயோகிக்கவேண்டாம்.

लब्ध्वापि कामधेनुं लाङ्गले विनियुज्यते:

காமதேனு கிடைத்த பிறகும் முட்டாள் அதனைக் கலப்பையில் கட்டி வயலுழுகிறுன்.

**इतः कोन्वस्ति मूढात्मा यस्तु स्वार्थे प्रमाद्यति ।**
**दुर्लभं मानुषं देहं प्राप्य तत्रापि पौरुषम् ॥**

**(विवेकचूडामणिः श्लोक 5)**

இத: கோந்வஸ்தி மூடாத்மா யஸ்து ஸ்வார்த்தே ப்ரமாத்யதி
துர்லபம் மானுஷம் தேஹம் ப்ராப்ய தத்ராபி பௌருஷம்.

அரிய மானிடப்பிறவியிலும் மிக்க அரிதான புருஷ ஜன்மத்தை அடைந்தும் தனது நன்மையைப் பெறுவதில் கருத்தில்லாதிருந்தால் அவனைக் காட்டிலும் பெரிய மூடன் எவன் இருக்கிறான்? என்பது பகவத்பாதாசாரியாள் கூறிய வசனத்தின் பொருள்.

### ப்ரியமான பொருளில் விருப்பம்.

ஒவ்வொருவனும் தனக்குப்பிரியமான பொருளைத்தான் விரும்புகிறான். புத்திசாலியான புதல்வன், அனுகூலமான மனைவி, சுகத்திற்கு சாதனமான செல்வம், மனை, அதனைப் பாதுகாக்கும் நாய் என்பவை போன்ற பல பொருள்கள் மனிதனுக்குப் பிரியமானவை. வெளிப்பொருள்களாகிய இவை சில சமயங்களில் பிரியமல்லாதவையாகவும் மாறுகின்றன. தனக்குப் பிரதிகூலமாக மாறிவிட்டால் அப்பிரியங்களாகின்றன. ஆகாரங்கள் கூட சில சமயத்தில் வியாதியினாலும் காலத்தின் மாறுபாட்டினாலும் வெறுக்கப்படுகின்றன. எக்காலத்தும் எக்காரணத்தாலும் பிரியமல்லாததாக இருக்கிற வஸ்து 'ஆத்மா' ஒன்றுதான். அந்த ஆத்மா வெளிப்பொருளன்று. எப்பொழுதும் பிரியமானதுபற்றியும் வேறொன்றின் சம்பந்தமின்றி தானு

கவே பிரியமானது பற்றியும் பிரியதமன் என்பது திண்ணம் = ஆத்மாவைக் காட்டிலும் பிரியமான பொருள் வேறு ஒன்றுமில்லை. மற்றப் பொருள்கள் ஆத்மாவிற்குப் பிரியமானதுபற்றி பிரியங்களாகின்றன. 'सर्वः कान्तमात्मीयं पश्यति' 'ஸர்வ: காந்தமாத்மீயம் பச்யதி' என்பது கவி வசனம். தன்னைச் சேர்ந்த பொருளை ஒவ்வொருவனும் சிறந்ததாக நினைக்கிறான் என்பது விளக்கம். மேற்கூறிய கருத்தை பகவத்பாதாள் சதச்லோகியில் கூறியுள்ளார்.

यस्माद्यावत्प्रियं स्यादिह हि विषयतस्तावदस्मिन्प्रियत्वं
यावद्दुःखंच यस्माद्भवति खलु ततस्तावदेवाप्रियत्वम् ।
नैकस्मिन् सर्वकालेऽस्त्यु भयमपि कदाप्यप्रियोऽपिप्रियः स्यात्
प्रेयानप्यप्रियो वा सततमपि ततः प्रेय आत्माख्यवस्तु ॥
(शतश्लोकी श्लोकः 10)

யஸ்மாத் யாவத்ப்ரீயம் ஸ்யாதிஹ ஹீ விஷயதஸ்
தாவதஸ்மின் ப்ரியத்வம்
யாவத்துக்கம்ச யஸ்மாத் பவதி கலு ததஸ்
தாவதேவா ப்ரியத்வம்
நைகஸ்மின் ஸர்வகாலேஸ்த்யு பயமபீ கதாப்யப்
ரியோபி ப்ரிய : ஸ்யாத்
ப்ரேயானப்ய ப்ரீயோவா ஸததமபி தத : ப்ரேய
ஆத்மாக்ய வஸ்து.

## ஆத்மா எங்கே?

அந்த ஆத்மா தொலையிலுள்ளதல்ல. மிகப் பக்கத்திலுள்ளது. மிக பக்கத்திலுமில்லை. தூரத்திலுள்ளது. 'तद्दूरे तद्वन्तिके' 'தத்தூரே, தத்வந்திகே' என்று உபநிஷத்து கூறுகிறது. விசாரம் செய்து

உணருபவனுக்கு ஆத்மா சமீபத்திலிருக்கும் பொருள். விசாரம் செய்யாதவனுக்கு தொலையி லுள்ளது. ஆத்மஞ்ஞானி இவ்வுலகத்திலேயே இப் பிறப்பிலேயே முக்தியை அடைகிருன். அவ னுடைய பிராணன் உடலைவிட்டு வெளியே செல்கிற தில்லை என்றும் உபநிஷத்துக்கள் கூறுகின்றன.

'अत्र ब्रह्म समश्नुते,' 'न तस्य प्राणा उत्क्रामन्ति'

'அத்ர பிரம்ம ஸமச்னுதே', 'ந தஸ்ய ப்ராண உத்க்ராமந்தி' என்பது உபநிஷத் வசனம்.

## ஆத்மஞானம் அவசியமானது.

ஆத்மாவைத் தெரிந்துகொள்ளுதல் மிக அவ சியமான காரியம். சாஸ்திரங்களில் கூறிய சாத னங்கள் ஆத்மஞானத்திற்கு இன்றியமையாதவை. எங்தெந்த உபாயங்களால் ஆத்மஞானம் உண்டா குமோ அவைகள் யாவற்றையும் கைக்கொள்ள வேண்டும். ஆத்மாவிற்கு 'ப்ரத்யக்' என்று பெயர். உள்ளேயிருக்கும் பொருள் என்பது கருத்து. பாத் திரத்தில் பால் இருப்பது போலவும் உறைக்குள் கத்தி இருப்பது போலவும் தேகத்திற்குள் ஆத்மா இருக்கிறதாக கருத்தல்ல. தேகத்திலிருக்கும் சைதன்ய சக்தி தேகம் முதலியவைகளைக் காட்டி லும் வேறுபட்டது. மனதினுல் அறியக்கூடியது என்று கருதப்படல் வேண்டும். அந்தக்கரணம் என்ற ஒரே பொருள், நான்கு செயல்களால்

1. மனது, 2. புத்தி, 3. சித்தம், 4. அகங்காரம் என்று நான்கு பெயர்களால் சில சமயங்களில் கூறப்படுகிறது. அத்தகைய அந்தக்கரணத்தால் சாஸ்திர முறைப்படி சாதனங்களைப் பின்பற்றி ஆத்மவஸ்து அறிந்துகொள்ளத் தக்கது. வண்டி முதலிய வாஹனங்கள் தன்னுடையதாயினும் கிரயத்திற்கு கிடைத்தாலும் யாத்திரைக்கு உபயோகப்படுகின்றன அல்லவா? அதுபோலவே, ஞானசாதனம் ஜன்மாந்தர புண்ணியங்களால் ஏற்பட்டவையாயினும், இந்த ஜன்மத்திலேயே சம்பாதனம் செய்யப்பட்டவையாயினும் ஞானத்தை அளிக்க உதவுகின்றன.

यया यया भवेत्पुंसां व्युत्पत्तिः प्रत्यगात्मनि ।
सा सैव प्रक्रियेहस्यात्साध्वीचैवानवस्थिता ॥
(सुरेश्वरवार्तिकम्)

யயா யயா பவேத் பும்ஸாம் வ்யுத்பத்தி: ப்ரத்யகாத்மநி
ஸா ஸைவ ப்ரக்ரியேஹஸ்யாத் ஸாத்வீசைவா ந வஸ்திதா.
(சுரேஸ்வர வார்த்திகம்.)

இப் பிரபஞ்சத்திலுள்ள வியவஹாரங்கள் மூலமாகவே ப்ரத்யகாத்மாவாகிய பரமனைத் தெரிந்துகொள்ள முடியும். அவைகள் சாஸ்திர முறையை வேதங்களில் கூறும் முறையைப் பின்பற்றியவைகளாக இருக்கவேண்டும். பலவிதங்களாகவுமிருக்கின்றன.

## ஆத்மாவை அறிந்துகொள்ள எல்லோருக்கும் அனுபவசித்தமான மார்க்கம்.

जाग्रत्स्वप्नसुषुप्तिषु स्फुटतरं योऽसौ समुज्जृम्भते
प्रत्यग्रूपतया सदाहमहमित्यन्तः स्फुरन्नेकधा ।
नानाकारविकारभाजिन इमान्पश्यन्नहं धीमुखा
न्नित्यानन्दचिदात्मना स्फुरति तं विद्धि स्वमेतं हृदि ॥
(विवेकचूडामणिः श्लो 219)

ஜாக்ரத்ஸ்வப்ன ஸுஷுப்திஷு ஸ்புடதரம் யோஸௌ ஸமுஜ்
ஜ்ரும்பதே
ப்ரத்யக்ரூபதயா ஸதாஹம ஹமித்யந்த: ஸ்புரன்நேகதா
நாநாகாரவிகார பாஜீந இமான் பச்யன்னஹம் தீமுகா
நித்யானந்தசிதாத் மநாஸ்புரதி தம் வித்தி ஸ்வமேதம் ஹ்ருதி.

இந்திரியங்களால் பொருள்களைத் தெரிந்து கொண்டு வியவகாரங்களைச் செய்யும் காலம் 'ஜாக்ரத் காலம்.' இந்திரியங்கள் செயலற்ற போதிலும் துயிலும் காலத்தில் (பித்தம் முதலிய தோஷங்களால், நித்திரையின் பலக்குறைவு ஏற்பட்டு) பற்பல பொருள்களை அனுபவித்து வியவகாரம் நடக்கும் காலம் 'ஸ்வப் னவஸ்தை'. இந்திரியங்கள் யாவும் ஓய்வடைந்து மனதிற்கும் செயல் இல்லாமல், பிராண சக்தி நிலைகொண்டுள்ள நிலைமை 'ஸுஷுப்தி' இம்மூன்று நிலைகள் வேறு பட்டபோதிலும், அவைகளில் ஒரேவிதமாக பிரகாசித்துக்கொண்டு பற்பல உருவங்களுடனும் விகாரங்களுடனும் கூடிய பொருள்களை அனுபவிக்

கின்றவன் மூன்று அவஸ்தைகளிலும் ஒரே மாதிரி யாக பிரகாசிக்கின்ற வஸ்துதான் 'ஆத்மா.' 'நான் பொருள்களைப் பார்த்தேன், கனவைக் கண்டேன், ஆனந்தமாக நித்திரை சுகத்தை அனுபவித்தேன்' என்று கூறுதலே ஆத்மா இந்திரியங்களைக் காட்டிலும் வேறுபட்டவன் என்பதற்குச் சான்றாகும். மற்றப் பொருள்களுக்கு உருவங்கள் உண்டு. விகாரங்களும் உண்டு. பார்க்கிறேன், கேட்கிறேன் என்பன போன்ற வியவகாரங்களுக்கு விஷயங்கள் ஆகின்றன. 'ஆத்மா' அப்படியில்லை. விகாரங்கள் 6. (1) जायते = உண்டாகிறது. (2) अस्ति = இருக்கிறது. (3) वर्धते = வளருகிறது. (4) परिणमते = மாறுதலடைகிறது. (5) अपक्षीयते = தேய்கிறது. (6) नश्यति = அழிகிறது. மேற்கூறிய 6 விகாரங்களுமற்ற பொருள் 'ஆத்மா'. எப்பொழுதும் நிலையுள்ளது, ஞானரூபமானது. ஆனந்தரூபமானது.

## 5-வது அத்தியாயம்.

### ஆத்மா நித்யன்.

ஆத்மா எல்லோருக்கும் பிரியமான பொருள் என்று கூறினோம். அந்த ஆத்மாவை நாம் உண்மையாக அறிந்துகொள்ளாமல் விபரீதமாகத் தெரிந்து கொள்ளுதல் தவறான ஞானம். ஆத்மா நித்யன், சித்ரூபி, ஆனந்தரூபி என்றும் முன்னமேயே கூறினோம். இறப்பும் பிறப்புமற்றவன் நித்யன். இறப்பும் பிறப்பும் தேகத்தினுடைய தர்மங்கள்.

ஆத்மாவினுடையவையல்ல. இந்த விஷயத்திற்கு சாஸ்திரம் பிரமாணம். சாஸ்திரத்திற்கு விரோத மான உலக வியவகாரம் பிரமாணமாகாது. பிச்சைக்காரனை 'சக்கிரவர்த்தி' என்று கூறுதல்போல் உண்மைக்கு விரோதமான சாஸ்திரமும் பிரமாண மாகாது.

## ஆத்மாவின் நித்யத்வத்தை அறிதல்.

உயர்ந்த ராஜகுலத்தில் பிறந்த ராஜகுமாரன் துரதிருஷ்டவசமாக தந்தை ராஜ்யமிழக்க தான் காட்டில் வசிக்கும் ஜனங்களால் வளர்க்கப்பட்டு தன்னுடைய ஜாதியை மறந்து தன்னை வளர்த்தவர்களுடைய இனத்தைச் சேர்ந்தவனாகவே வியவகாரம் செய்கிறான். தெய்வச் செயலாக இந்த உண்மையை அறிந்த உற்ற நண்பன் ஒருவன் அவனை சந்தித்து "நீ ராஜகுலத்தைச் சேர்ந்தவன், ராஜகுமாரன், ஸிம்மாசனத்தில் அமர்ந்துக் குடிகளை பாலனம் செய்யத் தகுதியுள்ளவன்" என்று உபதேசிக்கிறான் அவ்வாறு அடிக்கடி உபதேசத்தைக் கேட்டு அதிருஷ்டமும் அனுகூலமும் ஏற்படுகையில் அந்தக் குமாரன் ராஜ பதவியை அடைகிறான். அதுபோலவே, ஆத்மாவின் உண்மையான நிலை சாஸ்திரங்களில் கூறப்பட்டுள்ளது. அதனையறிந்த மகான்கள் கருணை கூர்ந்து அக்ஞானிகளுக்கு ஆத்ம தத்துவத்தை உபதேசம் செய்கையில், அந்த உபதேசம் காலம் அதிருஷ்டம் இவைகள் அனுகூலமாக மாறுகையில் பயனளிக்கிறது.

## சான்ஞேர்களின் சுபாவம்.

शान्ता महान्तो निवसन्ति सन्तो
वसन्तवल्लोकहितं चरन्तः ।
तीर्णाः स्वयं भीमभवार्णवं जना
नहेतुनान्यानपि तारयन्तः ॥
(विवेकचूडामणिः श्लोकः 39)

சாந்தா மஹாந்தோ நிவஸந்தி ஸந்தோ
வஸந்தவல்லோகஹிதம் சரந்த :
தீர்ணு : ஸ்வயம் பீமபவார்ணவம் ஜநா
நஹேது நான்யானபி தாரயந்த: ;

நறுமணமுடைய மலர்களும் நற்சுவை நிறம்பிய பழங்களும் தோன்றுவதற்குக் காரணமானது வஸந்த காலம். அந்த வஸந்த காலம் அவைகளை அனுபவிப்பதில்லை. அவைகளையனுபவிப்பவர்கள் ஜனங்கள். அதுபோலவே, மகான்கள் சாந்த குணத்திற்கு நிதிகளாக விளங்குவதுடன் உலகத்திற்கு நன்மையைச் செய்துகொண்டு வசிக்கின்றனர். பல துன்பங்களையளிக்கும் பயங்கரமான ஸம்ஸாரக் கடலைத் தாண்டினவர்கள் அவர்கள். எவ்விதமான கைம்மாறையும் எதிர்பார்க்காமலேயே மற்றவர்களையும் ஸம்ஸாரக் கடலைத்தாண்டும்படி செய்கின்றனர். அத்தகைய சான்ஞேர்களின் உபதேசம் ஞானத்திற்கு முக்கியமான உபாயம். அவர்களுடைய அருள் கிடைக்கவேண்டும். அவர்களுடைய உபதேசத்தை நாம் பெற வேண்டும்.

## நமது துக்கத்தின் காரணம்.

ध्यायतो विषयान्पुंसः सङ्गस्तेषूपजायते ।
सङ्गात्संजायते कामः कामात्क्रोधोऽभिजायते ॥
क्रोधाद्भवति संमोहः संमोहात्स्मृतिविभ्रमः ।
स्मृतिभ्रंशाद्बुद्धिनाशो बुद्धिनाशात्प्रणश्यति ॥
(गीता अध्यायः 2. श्लोकौ 62-63)

த்யாயதோ விஷயான்பும்ஸ: ஸங்கஸ்தேஷூபஜாயதே
ஸங்காத்ஸஞ்ஜாயதே காம: காமாத்க்ரோதோऽபிஜாயதே.
க்ரோதாத்பவதி ஸம்மோஹ: ஸம்மோஹாத்ஸ்ம்ருதிவிப்ரம:
ஸ்ம்ருதிப்ரம்சாத் புத்திநாசோ புத்திநாசாத் ப்ரணஶ்யதி.

'விஷயங்களை மனதில் யோசனை செய்கையில் அவைகளில் பற்று உண்டாகிறது. பிறகு கிடைக்க வேண்டும் என்ற ஆசை உண்டாகிறது. விருப்பம் பயன்படாவிடில் கோபம் உண்டாகிறது. கோபத்தால் விவேகம் குன்றுகிறது. விவேகம் குன்ற நல்ல விஷயங்களை யறிந்ததாலுண்டான சிறந்த ஞாபகம் நாசமடைகிறது. பிறகு செய்யத்தக்கது யாது, யாது செய்யத்தகாதது என்ற புத்தியின் வன்மையும் நாசமடைகிறது. அவ்வாறு புத்தியிழந்தபின் தனது நன்மை அடைய வன்மையற்றவனுகிறான். ஆகையால், தேகம் முதலியவற்றில் 'நான், என்னுடையது' என்ற அபிமானம் மேலிட்டு வியவகாரம் அதிகமாவதால் உண்மையான 'ஆத்மஞானம்' நிலைக்காமல் பரமானந்தமாகிய முக்திசுகத்திற்குத் தகுதியற்றவனுகிறான்.

ओं तत्सदिति निर्देशो ब्रह्मणस्त्रिविधः स्मृतः ।
(गीता अध्यायः 17 श्लो 23)

ஓம் தத்ஸதிதி நிர்தேசோ ப்ரம்மணஸ்த்ரவித: ஸ்ம்ருத:

பிரம்ம வஸ்துவை ஓம், தத், ஸத் என்ற மூன்று சொற்கள் கூறுகின்றன. அத்தகைய ஸத்தான பொருளை உண்மையாக அறிந்துகொள்ளாமையே நமது துன்பங்களுக்குக் காரணம். ஆத்ம ஞானம் ஸ்வானுபவத்திற்கு வந்த மகான்களுடைய உபதேசத்தால் அப்பரம்பொருளை உணர வேண்டும். அவர்களுடைய உபதேசத்தால் ஞானமாகிய கதிரவன் உதிக்க அஞ்ஞானமாகிய இருள் அறவே அறுபடுகிறது. ஞானத்தின் வன்மையால் 'இவ்வுலகம் யாவும் வாஸுதேவரூபமே.' என்று உறுதி கொள்கிறான். அத்தகைய ஞானம் பெறுவது மிக அரிது.

वासुदेवः सर्वमिति स महात्मा सुदुर्लभः ।
(गीता अध्यायः 7 श्लो 19)

வாஸுதேவ: ஸர்வமிதி ஸ மஹாத்மா ஸுதுர்லப:

## உண்மையான தத்துவஞானம் ஏன் உண்டாகிறதில்லை?

சூரியமண்டலம் மிகப் பெரியதாயினும் சிறிதாகக் கண்களுக்குத் தெரிகிறபடியால் சிறியது என்று முதலில் தெரிந்துகொள்கிறான். சாஸ்திரப்படி அது பெரிது என்ற அறிவு இருந்தபோதிலும்

தூரத்தில் இருப்பதால் சிறிதாகக் காணப்படு கிறது என்று உணருகிறோம். அதுபோலவே அஞ் ஞானத்தால் மறைவு ஏற்பட்டிருப்பதால் ஆத்ம தத்துவத்தை உணருகிறோமில்லை.

प्रज्ञावानपि पण्डितोऽपि चतुरोऽप्यत्यन्तसूक्ष्मार्थदृ
ग्व्यालीढस्तमसा न वेत्ति बहुधा संबोधितोऽपि स्फुटम्।
भ्रान्त्यारोपितमेव साधु कलयत्यालम्बते तद्गुणान्
हन्तासौ प्रबला दुरन्ततमसः शक्तिर्महत्यावृतिः ॥

(विवेकचूडामणिः श्लोकः 116)

ப்ரக்ஞாவானபி பண்டிதோபி சதுரோப்யத்யந்த ஸூக்ஷ்மார்த்த த்ருக்
வ்யாலீடஸ்தமஸா நவேத்தி பஹுதா ஸம்போதி தோऽபி ஸ்புடம்
ப்ராந்த்யாரோபிதமேவ ஸாது கலயத்யாலம் பதே தத்குணன்
ஹந்தாஸௌ ப்ரபலா துரந்ததமஸ: சக்திர் மஹத் யாவ்ருதி:

புத்திசாலியாயினும், கல்வி கற்றவனாயினும், ஸாமர்த்தியமுள்ளவனாயினும், மிக்க நுட்பங்களை யறியும் சக்தியுள்ளவனாயினும். நன்கு உபதேசம் செய்யப்பட்டவனாயினும் அஞ்ஞானத்தால் மூடப் பட்டவனாக பிரமையினால் கற்பனை செய்யப்பட்ட உருவத்தையும் பிரகிருதியின்=மாயையின் குணங்களையும் தெரிந்துகொண்டு அவைகளையே ஆத்மாவின் குணங்கள் என்று பிரமையாக உணரு கிறான். ஆச்சரியம்! எல்லையற்ற அஞ்ஞானத்தின் சக்தி வன்மையுள்ளது! அதுதான் ஆவரண சக்தி. சாஸ்திரங்களில் கூறும் ஆத்மதத்துவத்தை

அறிந்தபோதிலும் அந்த ஞானம் தன்னுடைய அனுபவத்திற்கு வராமையால் ஆவரணம் நீங்குகிறதில்லை. தத்துவத்தை உணருவதுமில்லை. இந்த விஷயம் தான் உபநிஷத்தில் கூறப்பட்டுள்ளது.

**श्रवणायापि बहुभिर्यो नलभ्यः**
**श‍ृण्वन्तोऽपि बहवो यं न विद्युः ।**
**आश्चर्योऽस्य वक्ता कुशलोऽस्य लब्धा**
**आश्चर्यो ज्ञाता कुशलानुशिष्टः ॥**

(कटोपनिषत् 1 2—7)

ச்ரவணயாபி பஹுபிர்யோ நலப்ய:
ச்ருண்வந்தோऽபி பஹவோ யம் ந வித்யு:
ஆஸ்சர்யோऽஸ்ய வக்தா குசலோஸ்ய லப்தா
ஆஸ்சர்யோ ஞாதா குசலாநுசிஷ்ட:

அந்த ஆத்ம வஸ்துவை பற்றி ச்ரவணம் செய்தல் எல்லோருக்கும் அரிது. அவ்வாறு ச்ரவணம் செய்தபோதிலும் அநேகர்கள் அறிந்து கொள்வதில்லை. ஆத்மாவைப் பற்றி உண்மையாகக் கூறுபவன், அடைகிறவன் அறிஞர்களால் உபதேசம் செய்யப்பட்டபோதிலும் யதார்த்தமாக அறிந்துகொள்பவன் மிகவும் துர்லபம்.

## கர்த்ருத்துவம் முதலியவை ஆத்மாவின் குணங்களல்ல.

நான் செய்கிறேன், போகிறேன் என்று முதலிய வியவகாரங்களில் ஆத்மா கர்த்தா என்று தோன்றுகிறது. ஆத்மாவிற்கு அத்தகைய

குணங்கள் உண்மையில் கிடையா. இந்த விஷயத்தை உபநிஷத்துக்களில் கூறும் வசனங்களின் கருத்தை அறிந்துகொண்டு தக்க யுக்திகளால் சர்ச்சை செய்து நிச்சயம் செய்துகொள்ளவேண்டும். பந்தம் (பற்றுதல்) அவித்தையால் உண்டாகிறது. கர்த்ருத்வம் முதலிய குணங்களை ஆத்மாவினுடையது என்று தெரிந்துகொள்ளுதலே அவித்தை. அந்த பந்தம் தான் துன்பங்களுக்கு மூலகாரணம். வித்யையால் அவித்யை நாசமடைகிறது. துக்கங்களும் நீங்கும். அந்த வித்யை சாஸ்திரத்தினுல் ஏற்படவேண்டும். சாஸ்திரம்,

**'ज्ञात्वा देवं सर्वपाशापहानिः'**

' ஞாத்வா தேவம் ஸர்வபாசாபஹாநி:'

என்று கூறுகிறது. பரமனை அறிந்துகொண்டால் எல்லா பாசங்களும் அறுபடுகின்றன என்று பொருள்.

இருளில் ஒருவன் மனிதனொருவனைக் கண்டு 'பூதம்' என்று பிராந்தியை அடைகிறுன். அஞ்சுகிறுன். பலவித துன்பங்களையு மடைகிறுன். அதற்காக மந்திரவாதம் செய்வித்து பொருளையும் செலவு செய்கிறுன். எவ்வளவு பிரயத்னம் செய்தபோதிலும் பிராந்தி நீங்குவதில்லை. அதன் பயனும் விடுகிறதில்லை. "நீ இருளில் கண்டது மனிதனே யல்லாமல் பூதமன்று. அந்த மனிதன் நான்தான்." என்று நண்பன் உண்மையைக் கூறி, அதனை உணர்ந்துகொண்டால் பிராந்தி நீங்கி துன்பங்களும் விலகுகின்றன.

## ஜீவஸிருஷ்டிதான் துக்கத்திற்குக் காரணம்.

ஈசுவரனால் ஸிருஷ்டிக்கப்பட்ட பொருள்கள் நமக்குத் துன்பத்தையளிப்பதில்லை. அவைகளில் நாம் வைத்துள்ள அபிமானம் முதலியவைதான் நமது துன்பத்திற்குக் காரணம். தூரதேசத்தி லிருக்கும் உறவினன் ஒருவன் உயிருடன் இருக் கையிலேயே பகைவன் ஒருவன் "உனது பந்து இறந்துவிட்டான்." என்று பொய்யாகக் கூறினால். அளவற்ற வருத்தமுண்டாகிறது. இறந்தது 'உனது பந்துவல்லன்' என்று வேறு ஒருவன் கூறுகையில் வருத்தம் நீங்குகிறது. பந்து இறந்த போதிலும், அந்தச் செய்தி நமது செவியில் படாத வரையில் துக்கம் இல்லை. ஸந்தோஷமாகவே இருக்கிறோம். பகைவன் இறந்தால் துக்கமே இல்லை. ஸந்தோஷம் மேலிடுகிறது. இந்த விஷ யம் வித்யாரண்ய ஸ்வாமிகளால், பஞ்சதசியில் 'திருப்தி தீபப்ரகரணம்.' என்ற பகுதியில் விரி வாக விளக்கப்பட்டுள்ளது. ஆகவே, ஈசுவரன் ஸிருஷ்டித்த பொருளில் நமது அபிமானம் நிலவ இன்பதுன்பங்கள் ஏற்படுவதால் ஜீவஸிருஷ்டி தான் = ஜீவனுடைய கற்பனை நமது பந்தத்திற்குக் காரணம் என்று தெரிந்துகொள்ளவேண்டும்.

## ஞானத்திற்கு ஸன்யாஸம் காரணம்.

ஆத்ம ஞானத்தை அடைவதற்கு ஸன்யாஸம் காரணம். நொண்டி, ஊமையன் போன்ற அங்க ஹீனமுள்ளவர்களுக்குத்தான் ஸன்யாஸம் தகுதி

உள்ளது என்று சிலர் கூறுகின்றனர். அது சரியன்று. அக்ஞானம் என்ற இருள் அங்கஹீன முள்ளவர்களைமட்டும் பாதிக்கிறதில்லை. அஞ்ஞான நாசத்திற்கு ஞானத்தைப் பெறுதல் இன்றியமை யாதது. அந்த ஞானத்திற்கு ஸன்யாஸம் காரண மென்றால், மோக்ஷத்தை விரும்புகிற ஒவ்வொரு வனும் பற்றற்றவராக இருக்கவேண்டுமென்பதே கருத்து.

---

## 6-வது அத்தியாயம்.

## ஆத்ம ஞானத்திற்கு ஸாதனம்.

ஆத்ம ஞானம் யாது? துக்கத்திற்குக் காரணம் யாது? என்பதும் கூறப்பட்டது. துக்கங்களை அகற்றும் ஆத்மஞானத்திற்குள்ள சாதனங்கள் கூறப்படுகின்றன. ஆத்மஞானம் துக்கங்களின் நாசத்திற்குக் காரணம். அந்த ஞானம் 'ஆத்மா அத்விதீயன்' என்ற ஞானமாகும் அதாவது காரியப் பொருள்கள் யாவும் காரணரூபமேயன்றி வேறில்லை ஆத்மாவைத்தவிர நம்மால் பார்க்கப் படும் பொருள்கள் யாவும் காரியப் பொருள்கள் உண்டானவைகள் (மாயையைத் தவிர) அவ்வாறு தெரிந்துகொள்ளுதல் 'ஆத்மா அத்விதீயின்' என்ற ஞானமாகும். தங்கத்தால் செய்யப்பட்ட நகை கள் பலவகையாயினும், வெவ்வேறு உருவத்தை அடைதல் என்ற பேதமேயன்றி அவைகள் தங்க மல்ல என்று கூறமுடியாதன்றோ! இந்த விஷ

யத்தை பகவத் பாதாள் பிரகரணகிருந்தங்களில் எளிய நடையில் நன்கு போதித்துள்ளார்கள்.

शास्त्रेषु दुर्ग्रहोऽप्यर्थः स्वदते कविसूक्तिषु ।
दृश्यं करगतं रत्नं दारुणं फणिमूर्धनि ॥

सभारञ्जनशतकम् श्लोकः 14
—(नीलकण्ठदीक्षितीयम्)

சாஸ்த்ரேஷு துர்க்ரஹோऽப்யர்த்த:ஸ்வததே கவிஸூக்திஷு
த்ருச்யம் கரகதம் ரத்னம் தாருணம் பணிமூர்தனி.

சாஷதிரங்களில் அறிந்துகொள்ள முடியாத விஷயம் கவிகளுடைய இனிய சொற்களில் சுவையுடன் அறிந்துகொள்ளப்படுகிறது. நாகப் பாம்பின் தலையில் இருக்கையில் நாகரத்தினம் பயங்கரமாகக் காணப்படுகிறது, அடைதற்கரிது. அந்த ரத்னம் மனிதனுடைய கையிலிருக்கையில் அழகியதாகக் காணப்படுகிறது. பெறுதற்கும் எளிதாகவே இருக்கிறது அதுபோல் உபநிஷத்துக்கள் ஸூத்திரங்கள் இவைகளின் பாஷ்யங்களில் துரூஹமான விஷயங்கள் பகவத் பாதாளுடைய பிரகரண நூல்களில் சுவையுடன் விளக்கப்பட்டுள்ளன. ஜனங்களுடை புத்தியில் நிலைக்கத் தக்கவாறு இனிய சொற்களாலும் உதாரணங்களாலும் விஷயத்தை பகவத் பாதாசாரியாள் விளக்கியுள்ளார்.

காரியப்பொருள்கள் மாறுபடுதல் என்பது உருவத்தின் மாறுபாடே யல்லாது காரணப் பொருள் வேறுபடுகிறதில்லை. ஆகையால், சித்ரூபியும், ஞானரூபியும், ஆனந்தரூபியுமாகிய ஆத்மவஸ்து

காரியங்களான அநேகப் பொருள்களாக தோற்ற மளிக்கிறது, என்பதை நன்கு உணரவேண்டும்.

சிறிய பையனுக்கு எழுத்துக்களைக் கற்பிக் கையில் சிறிது கஷ்டம் இருக்கத்தான் செய்கிறது. நாம் எழுதிய வடிவத்தை அந்தப்பையன் பார்த்து தெரிந்துகொள்ளுதல் எளிதாயினும் அந்த வடிவத் துடன் எழுதும் வல்லமை விரைவில் ஏற்படுகிற தில்லை. சிறிது தாமதத்தில்தான் அந்த வல் லமை ஏற்படுகிறது. இயல்பாகவே தப்பிதமான வழியில் அறிவு ஏற்பட்டால் அதனை சீர்திருத்தம் செய்தல் எளிதில் முடியாது. வேதத்தின் ஸ்வரத் தைத் தவறாகத் தெரிந்துகொண்டால் பின் சீர் திருத்தம் செய்வது கஷ்டமான காரியம். ஸ்வரமே தெரியாதவனுக்கு ஸ்வரத்தை போதித்தல் எளி தான காரியம். அறிவிலிக்கு அறிவை உணர்த் தல் எளிது. நமது பிராந்தி ஞானம் = தவறான ஞானம் நாசமடைவதறகு ஆசாரியருடைய உப தேசம் மிகவும் அவசியம். அந்த உபதேசம் அடிக் கடி ஏற்படுவதும் அவசியம். 'தத்வமஸி' முதலிய மஹா வாக்கியங்களின் பொருளை அறிந்து கொள்ளுவதற்கு வேதங்களுக்கு விரோதமற்ற யுக்திகளால் சர்ச்சை செய்தல்வேண்டும். ஆகவே சாஸ்திரம், குருநாதருடைய உபதேசம், சிரவணம், மனனம், நிதித்தியாஸனம் (தியானம்) என்பவை கள் ஞானோதயத்திற்குக் காரணங்கள்.

**स्वस्याविद्याबन्ध सम्बन्ध मोक्षात्सत्यज्ञानानन्द रूपात्मलब्धौ।**
**शास्त्रं युक्तिर्देशिकोक्तिः प्रमाणं चान्तः सिद्धास्वानुभूतिः प्रमाणम्॥**

**(विवेकचूडामणिः श्लोकः 472)**

ஸ்வஸ்யா வித்யாபந்தஸம்பந்த மோக்ஷாத்
ஸத்ய ஞானனந்த ரூபாத்ம. லப்தௌ
சாஸ்த்ரம் யுக்திர் தேசிகோக்தி: ப்ரமாணம்
சாந்த: ஸித்தாஸ்வாநுபூதி: ப்ரமாணம்.

என்று பகவத்பாதாசாரியருடைய வசனம்.

## தர்மஞானத்திற்கும் ஆத்மஞானத்திற்கும் பேதம்

இது தர்மம் இது அதர்மம் என்பதை சாஸ்திரங்கள் மூலமாகத்தான் அறிந்துகொள்ள வேண்டும். நமது யுக்திகள் தர்மாதர்மங்களைத் தீர்மானம் செய்யப்பிரமாணங்கள் ஆகா. அப்படியாகில் அவை நிலையுள்ள நிலையில்லாமல் போவையாகும். ஒருவன் கூறிய யுக்தியை மற்றொருவன் மறுப்பான். ஆகையால், வேதங்கள் தான் அந்த விஷயத்திற்குப் பிரமாணம். முக்திசுகம் திருஷ்டமான பயன் அனுபவத்திற்கு வரவேண்டியது, அதற்கு சாஸ்திரங்களில் நம்பிக்கையும் ஆசார்ய வசனத்தில் நம்பிக்கையும் அவசியம். அதுபோலவே தகுந்த யுக்திகளையும் தனது புத்திசக்தியால் உபயோகித்தல் வேண்டும். நல்ல யுக்திகளை உபயோகித்தல் மனம் பரிபக்குவமானல் உண்டாகும். ஸ்ரீ சங்கரவிஜயத்தில் ஸ்ரீ வித்யாரண்ய யதீசுவரருடைய வசனம்.

**परिपक्वमतेः सकृच्छ्रुतं जनयेदात्मधियं श्रुतेर्वचः ।**
**परिमन्दमतेः शनैः शनैर्गुरुपादाब्जनिषेवणादिना ॥**
**(श्रीशंकरविजये सर्ग 10. श्लोक 95)**

பரிபக்வமதே: ஸக்ருச்ச்ருதம் ஜநயேதாத்மதியம் ச்ருதேர்வச:
பரிமந்தமதே: சநை: சநைர் குருபாதாப்ஜ நிஷேவணுதிநா.

(மனம் பரிபக்குவமானவனுக்கு ஒரு தடவை கேட்கும்பொழுதே வேதவசனம் ஞானத்தை உண்டாக்குகிறது. மந்தபுத்தி யுள்ளவனுக்கு ஆசார்யருடைய பணிவிடை முதலியவைகளால் காலக் கிரமத்தில் ஞானம் உதயமாகிறது )

அவ்வாறு ஞானம் உதயமாகவேண்டுமேயாகில், இந்திரியங்களின் செயல்களை உள்நோக்கத்திற்கு கொண்டு வரவேண்டும். பிரம்மாவினுல் சிருஷ்டிக்கப்பட்ட ஜனங்களுடைய இந்திரியங்கள் சுபாவமாக வெளிநோக்குடயவை.

**पराञ्चि खानि व्यतृणत्स्वयं भूस्तस्मात्पराङ पश्यति नान्त रात्मन्।**

**(कटेपनिषत्** 2-4-1)

பராஞ்சி காநிவ்யத்ருணத் ஸ்வயம் பூஸ்தஸ்மாத் பராங் பச்யதி நாந்தராத்மன்.

(பிரம்மன் இந்திரியங்களை வெளிநோக்கமுள்ளவைகளாக அமைத்துள்ளார். ஆகையால், மனிதன் ~~வெளியே~~ உள்ளே பார்க்கிறதில்லை ) ஆத்மஞானத்தை அடைய விரும்புகிறவன் ஆசாரியருடைய உபதேசத்தினுல் முயற்சிசெய்து உள்நோக்கமுள்ளவனுகிருன். அவன் தீர்புருஷன் அநேகர்களில் ஒருவன்.

### ஆத்மா-நித்யன், சுகரூபி ஞானரூபி ஏன்?

இறப்பும், பிறப்பும் உடலின் தர்மங்கள் என்று முன்னமே கூறியுள்ளோம். ஆத்மாவிற்கு ஜனன மரணங்களில்லை.

शब्दस्पर्शादयो वेद्या वैचित्र्याज्जागरे पृथक् ।
ततो विभक्ता तत्संविदैक रूप्यान्न भिद्यते ॥
तथा स्वप्नेऽत्र वेद्यं तु न स्थिरं जागरे स्थिरम् ।
तद्भेदोऽतस्तयोः संविदेकरूपा न भिद्यते ॥
सुप्तोत्थितस्य सौषुप्त तमोबोधो भवेत्स्मृतिः ।
सा चाव बुद्धविषयाऽवबुद्धं तत्तदा तमः ॥
स बोधो विषयाद्भिन्नो न बोधात्स्वप्न बोधवत् ।
एवं स्थानत्रयेऽप्येका संवित्तद्वाद्दिनान्तरे ॥
(पञ्चदशी तत्वाविवेकप्रकरणम् )

*சப்தஸ்பர்சாதயோ வேத்யா வைசித்ர்யாஜ்ஜாகரே ப்ருதக்*
*ததோ விபக்தா தத்ஸம்விதைதகரூப்யாந் நபித்யதே*
*ததா ஸ்வப்னேऽத்ர வேதயம் து ந ஸ்திரம் ஜாகரே ஸ்திரம்*
*தத்பேதோऽதஸ்தயோ : ஸம்விதேகரூபா ந பித்யதே*
*ஸுப்தோத்திதஸ்ய ஸௌஷுப்ததமோபோதோ பவேத்ஸ்ம்ருதி:*
*ஸா சாவ புத்த விஷயாऽவபுத்தம் தத்ததா தம :*
*ஸபோதோ விஷயாத்பின்னோ நபோதாத் ஸ்வப்ன போதவத்*
*ஏவம் ஸ்தானத்ரயேऽப்யேகா ஸம்வித் தத்வத்தினாந்தரே.*

*விழிப்பு உணர்ச்சியில் பலவகை ஞானங்களிருப்பது எல்லோருக்கும் அனுபவஸித்தம். விஷயங்கள் வெவ்வேறாயினும் அவைகளின் அறிவு என்பது ஒன்றுதான். ஆகையால், ஞானத்திற்கு மாறுபாடு இல்லை. விழிப்பு உணர்ச்சியில் பல வியவகாரங்களைச் செய்து ஞானமடைந்தவன் தான் பற்பல கனவுகளை யனுபவிக்கிறான். கனவுப்பொருள்கள் வெவ்வேறாயினும் 'உணருதல்' என்ற ஞானம் மாறுபடுகிறதில்லை. அவன் துயிலுங்கால் சுகமனுபவிப்பவன். ஒரே கண்ணாடியில் பற்பல ஜனங்கள் பார்க்கிறபோதிலும் கண்ணாடி மாறுபடுகிற*

தில்லையல்லவா? அதுபோலவே ஜாக்ரத், ஸ்வப்னம், ஸுஷுப்தி என்ற மூன்று நிலைமைகள் மாறு பட்டபோதிலும் நிலைகொண்ட ஞானத்திற்கு பேத மில்லை. அந்த ஞானம் ஆத்மரூபமேயாகும்.

துக்கம் பொருள்களுடைய ஸம்பந்தத்தால் உண்டாகிறது. இஷ்டமில்லாத பொருள்களின் சம்பந்தமுண்டாகையில் வருந்துகிறான். எவ்விதப் பொருளும் ஸம்பந்தப்படாமலிருக்கையில், 'நான் இப்பொழுது சுகமாக இருக்கிறேன். ஸ்வஸ்தமாக இருக்கிறேன்' என்று கூறுதல் இதற்குச் சான்றாகும்

தூக்க ஞானம் உண்டு என்பதற்கு நிரூபணம் — விழித்தபின், 'சுகமாக நான் நித்திரை செய்தேன்' என்று தனது அனுபவத்தைக் கூறும் வசனம் தான். சுகாநுபவம் ஏற்படாவிடில், அவ்வாறு கூறமுடியாது. நித்திரையில் அஞ்ஞானத்தின் சம்பந்தமுள்ளதால் முக்தி சுகமில்லை. 'நான் சுகமாக தூங்கினேன். ஒன்றுமறியவில்லை' என்று கூறுதல் அக்காலத்தில் அஞ்ஞானமுண்டு என்பதற்கு நிரூபணம் அனுபவம் தான் ஞானம். மூன்று காலங்களிலும் ஆனந்தானுபவம் சிறிதாவது இருந்து கொண்டே இருக்கிறது. துக்கம் பொருள்களின் சம்பந்தத்தினால் என்று கூறினோம்.

குழந்தைகளுக்கும் ஞானம் உண்டு தாய் தந்தையர்கள் தமது குழந்தைகளுக்கு ஞானத்திற்குப் பொருள்களை மட்டும் தான் அளிக்கின்றனர். ஞானத்தையல்ல. ஞானம் ஸ்வயமாகவே உள்ளது.

## ஏமாற்றம் இந்திரியங்களால்

மான் சப்தத்தாலும்; யானை ஸ்பர்ச்ச உணர்ச்சியாலும், ஈசல் உருவத்தாலும், (தீப ஜ்வாலையால்) மீன் சுவையாலும், வண்டு கந்தத்தாலும் ஏமாந்து வலை முதலியவைகளில் அகப்பட்டுத் துன்பமடைகின்றன. அவைகளின் துன்பத்திற்குக் காரணம் ஒரு புலன். ஐம்புலங்களுக்கும் வசப்பட்ட மனிதனைப்பற்றிக் கூறவேண்டுமா? இந்த விஷயத்தை பகவத்பாதாள் விவேக சூடாமணியில் கூறியுள்ளார்.

**शब्दादिभिः पञ्चभिरेव पञ्च पञ्चत्वमापुः स्वगुणेन बद्धाः ।**
**कुरङ्गमातङ्ग पतङ्गमीनभृङ्गाः नरः पञ्चभिरञ्चितः किम् ॥**
**(विवेकचूडामणिः श्लोकः 78)**

சப்தாதிபி : பஞ்சபிரேவ பஞ்ச ப்ஞ்த்வமாபு : ஸ்வகுணேந பத்தா
குராங்கமாதங்க பதங்கமீன ப்ருங்கா நர : பஞ்சபிரஞ்சித : கிம் !

ஆகையால் புலன்களுக்கு வசப்படாமை ஞானத்திற்கு இன்றியமையாத காரணம். பாசத்தை நீக்குவதால் ஜலம் சுத்தமடைவதுபோல், அக்ஞானத்தை விலக்குவதால் மனம் சுத்தமடைகிறது மனச்சுத்தி நிலவ ஆத்மஞானம் நிலைக்கிறது

## ஆத்மஞானியின் லக்ஷணம்.

**शान्तो दान्तः परमुपरतः क्षान्तियुक्तः समाधिं**
**कुर्वन्नित्यं कलयति यतिः स्वस्य सर्वात्मभावम् ।**
**तेनाविद्यातिमिरजनितान् साधु दग्ध्वा विकल्पान्**
**ब्रह्मा कृत्या निवसति सुखं निष्क्रियो निर्विकल्पः ॥**
**(विवेकचूडामणिः श्लोकः 556)**

சாந்தோ தாந்த : பரமுபரத : க்ஷாந்தியுக்த : ஸமாதிம்
குர்வந்நித்யம் கலயதி யதி : ஸ்வஸ்ய ஸர்வாத்ம பாவம்
தேநா வித்யாதிமிர ஜனிதான் ஸாது தக்த்வா விகல்பான்
பிரம்மாகிருத்யா நிவஸதி சுகம் நிஷ்க்ரியோ நீர்விகல்ப :

மனதை அடக்கியவரும், வெளி இந்திரியங்களை அடக்கியவரும், முறைப்படி கர்ம பலன்களையும், கர்மாக்களையும் தியாகம் செய்தவரும், சினம் கொள்ள ஸந்தர்பம் ஏற்படுகையில் தமக்கு வன்மையிருந்தபோதிலும் சினத்தை தணித்துக்கொள்பவரும், எப்பொழுதும் ஸமாதி நிஷ்டையிலிருப்பவரும் ஆகிய யதீசுவரர் தம்மை ஸகல உலகங்களுக்கும் ஆத்மா என்ற பாவனை செய்துகொண்டிருப்பார். ஸமாதி நிஷ்டையால் 'தான் ஸர்வ ஸ்வரூபி' என்ற பாவனை உறுதி பெற அக்ஞானத்தாலுண்டாகும் விகற்பங்களை யகற்றி பிரம்ம பாவத்துடன் விளங்குவதால் செயலற்றவராயினும் ஆனந்தத்துடன் பிரகாசிக்கிறார்.

விஷயங்கள் கிடைக்கும்பொழுது அவைகளில் பற்றில்லாமை சாந்தகுணம். வெளிப்பொருள்கள் புலப்படுகையில் இந்திரியங்களை அவைகளுக்கு வசப்படுத்தாமலிருத்தல் தமம். ஆகாரம் கிடைக்காமையால் ஏகாதசி உபவாஸம் சிறந்ததன்று. ஜடப்பொருள் போல் அமைதியும் சிறப்பல்ல. ஞானியாக இருக்கையில், அந்த ஞானத்தை பிறரை அவமதிக்க உபயோகப்படுத்தாமலிருப்பது மிக்கச் சிறந்த குணம். "ज्ञाने मौनम्" 'ஞானே மௌனம்' என்று கவி காளிதாசனுடைய வசனம்.

**अद्वेष्टा सर्वभूतानां मैत्रः करुण एव च ।**
**निर्ममो निरहंकारः समदुःखसुखः क्षमी ॥**
**(गीता अध्याय 12, श्लोक 13)**

அத்வேஷ்டா ஸர்வபூதாநாம் மைத்ர: கருணஏவச
நிர்மமோ நிரஹங்கார: ஸமதுக்கசுக: க்ஷமீ.

*பிராணிகளுக்குத் துன்பம் செய்யாதவனும், நட்புக்கொண்டவனும், கருணையுள்ளவனும், 'என்னுடையது' என்ற அபிமானமில்லாதவனும், 'நான்' என்ற அகங்காரமற்றவனும் சுகதுக்கங்களில் மனதிற்கு மாறுபாடு இல்லாதவனும் பொறுமையுள்ளவனுமாக ஞானி இருக்கிறான்.*

**कर्मेन्द्रियाणि संयम्य य आस्ते मनसा स्मरन्**
**इन्द्रियार्थान्विमूढात्मा मिथ्याचारः स उच्यते ॥**
**(गीता अध्याय 3, श्लोक 6)**

கர்மேந்த்ரியாணி ஸம்யம்ய ய ஆஸ்தே மநஸாஸ்மரன்
இந்த்ரியார்த்தான் விமூடாத்மா மித்யாசார: ஸ உச்யதே

*வெளிக் கருவிகளை மட்டும் அடக்கி மனதினால் விஷயங்களை நினைப்பவன் கபடமான செயலுள்ளவன் என்று கூறப்படுகிறான். கொக்கின் தியானம் போல் அவனுடைய தியானம் நிந்திக்கத் தக்கது.*

**वाक्सायका वदनान्निष्पतन्ति यैराहतः शोचति रात्र्यहानि ।**
**परस्य नामर्मसु ये पतन्ति तान्पण्डितो नावसृजेत्परेभ्यः**
**(उद्योगपर्व अध्याय 34 श्लोक 80)**

வாக்ஸாயகா வத்நாந் நிஷ்பதந்தி யைராஹத: சோசதி
ராத்ர் யஹானி
பரஸ்ய நாமர்மஸுயே பதந்தி தான் பண்டிதோ
நாவஸ்ருஜேத் பரேப்ய: ।

அம்பு எய்தால் சில சமயத்தில் குறி தவறும். அம்பினுல் அடிபட்டவன் சிறிது நேரம்தான் வேதனையால் துன்பப்படுவான். வாயிலிருந்து கிளம்பும் வசனங்களாகிய அம்புகளோவெனில் பிறருடைய மர்மங்களிலேயே வீழுகின்றன. அவைகளால் அடிக்கப்பட்டவன் அல்லும் பகலும் வருந்துவான். ஆகையால், அறிஞன் அத்தகைய அம்புகளை அன்னியன் மீது உபயோகிக்கக் கூடாது. 'आकृष्टः कुशलं वदेत्' 'ஆக்ருஷ்ட: குசலம் வதேத்' என்று மகாபாரத நூல் கூறுகிறது. நிந்திக்கப்பட்டாலும் நன்மையைக் கூறவேண்டும்.

அவிவேகத்தாலும் அசக்தியாலும் கர்மங்களை தியாகம் செய்தல் தகாது. தியான நிஷ்டையால் விகற்பங்கள் விலகுகின்றன. பொருளின்பங்களைக் கனவிற்குச் சமமாக உணருவார். தமது தேகத்திற்கு வேண்டிய போஷணை முதலியவைகளைக் கூட பிறனுல் தூண்டப்பட்டு அவருடைய வற்புறுத்தலால் செய்வார். குழந்தையின் சுபாவம் ஏற்படுகிறது. அத்தகைய மகாபாக்கியம் பெற்ற மகானைக் கண்டுள்ளோம். அவர் எமது ஆசிரியரே! இங்குள்ளோர்களும் அவர்களை தர்சனம் செய்தீர்கள்! எமது ஆசிரியர் அத்தகைய மகான் என்று அபிமானத்துடன் கூற பாக்கியம் பெற்றுள்ளோம். அவருடைய மகிமை.

**कुलं पवित्रं जननी कृतार्था विश्वंभरा पुण्यवती च तेन ।**
**अपारसंवित्सुखसागरेऽस्मिन् लीनं परे ब्रह्मणि यस्यचेतः ॥**

குலம் பவித்ரம் ஜனநீ கிருதார்த்தா விச்வம்பரா
புண்யவதீ ச தேந
அபாரஸம்வித்ஸுகஸாகரே஽ஸ்மின் லீனம் பரே ப்ரம்மணி
யஸ்ய சேத:

நித்யானந்தக் கடலாகிய பரமனிடத்தில் எவருடைய மனம் லயமடைந்துள்ளதோ, அத்தகைய மகான் தோன்றியதால் அவருடைய குலம் பரிசுத்தமானது. அவருடைய அன்னை கிருதார்த்தை=பிறவிக் கடலைத் தாண்டினவள். அவரால் உலகமே புண்ணியம் பெற்றது.

'तस्य पुत्रा दायमुपयन्ति'

'தஸ்ய புத்ரா தாயமுபயந்தி'

ஞானியின் செல்வத்திற்குப் புதல்வர்கள் உரிமையுள்ளவர்கள்.

'सुहृद: साधुकृत्याम'

ஸுஹ்ருத: ஸாதுக்ருத்யாம்

நண்பர்கள் ஞானியின் புண்யத்தை அடைகின்றனர்.

'द्विषन्त: पापकृत्याम्'

த்விஷந்த: பாபக்ருத்யாம்

பகைவர்கள் அவருடைய பாபங்களை அடைகின்றனர் என்று உபநிஷத்து கோஷிக்கிறது.

ஆகையால், ஞானிக்கு கர்மபயன்கள் இல்லை அவரை நிந்தித்தல் தகாத காரியம். அவருடைய நட்பு நன்மையை அளிக்கிறது.

## அத்தியாயம் 7.

या सृष्टिः स्रष्टुराद्या वहति विधिहुतं या हविर्या च होत्री
ये द्वे कालं विधत्तः श्रुतिविषयगुणा या स्थिताव्याप्य विश्वम्
यामाहुः सर्वबीजप्रकृतिरिति यया प्राणिनः प्राणवन्तः
प्रत्यक्षाभिः प्रपन्नस्तनुभिरवतु वस्ताभिरष्टाभिरीशः ॥

யா ஸ்ருஷ்டி: ஸ்ரஷ்டுராத்யா வஹதி விதிஹுதம் யா ஹவிர்யாச ஹோத்ரீ
யே த்வே காலம் விதத்த: ச்ருதிவிஷயகுணா யா ஸ்திதா வ்யாப்ய விச்வம்
யாமாஹு: ஸர்வபீஜப்ரக்ருதிரிதி யயா ப்ராணிந: ப்ராணவந்த;
ப்ரத்யக்ஷாபி: ப்ரபன்னஸ்தநுபிரவது வஸ்தாபி ரஷ்டாபிரீச:

### 7. ஆஸ்திகத்தின் உயர்வு.

இந்தக் கல்யாணபுரியில் 17 நாட்கள் ஸ்ரீ சந்திர மௌளீச்வரருடையவும், ஸ்ரீ சாரதா தேவியினுடையவும் ஆராதனை மிக விமரிசையாக நடந்தது. ஜனங்கள் மிகவும் சிரத்தையுடனும் குதூகலத்துடனும் பூஜாகாலங்களில் வந்து சேர்ந்ததைப் பார்க்கும்பொழுது இங்கு, நாஸ்திகம் இடம் பெறவில்லை என்று உறுதியாகக் கூறலாம். இந்த சமயத்தில் காளிதாசன் கூறியுள்ள, "श्रुतौ तस्करता स्थिता" "ச்ருதௌ தஸ்கரதா ஸ்திதா" = திருட்டுத்தனம் பேச்சில்தான் இருந்தது. என்ற வசனம் ஞாபகத்திற்கு வருகிறது. தங்களுடைய கிருஹத்தில் செய்யவேண்டிய வேலைகளைக் கவனிக்காமலும், அல்லது விரைவில் அவைகளைச் செய்து முடித்ததும் பகவதாராதனம் நடக்கும்

காலங்களில் அமைதியாகவும் சிரத்தையுடனும் பூஜா விசேஷங்களை ஆண், பெண்கள், குழந்தைக ளுள்பட யாவரும் கண்குளிரப் பார்த்து ஆனந்த மடைந்தனர். இவ்விடத்தில் ஆஸ்திக்யம் ஓங்கி நிலைபெற்றுள்ளது என்பதற்கு இதைப் பார்க்கி லும் வேறு நிரூபணம் தேவையில்லையன்றோ! இத்தகைய ஆஸ்திக்யத்திற்கு இவ்வூர் திருஷ் டாந்தமாக இருக்கவேண்டுமேயன்றி, தார்ஷ்டாந் திகமாக இருக்கக்கூடாது என்று எமது விருப்பம். அதாவது, "கல்லிடைக்குறிச்சியில் அமைந்த சிறப்பு எமது ஊரிலும் ஏற்பட்டது," என்று மற்ற ஊரவர் கூறும்படியான நிலைமை மாறுபடக் கூடாது. ஆகவே பக்திக்கும், ஆஸ்திக்யத்திற்கும், சிரத்தைக்கும் இந்தக் கல்யாணபுரி மற்ற ஊர் களுக்கு திருஷ்டாந்தமாக நிலைத்திருத்தல் புகழத் தக்கது.

கண்ணாடியில் பார்க்கும்பொழுது நமது முகத் தின் உருவந்தான் பிரதிபிம்பமாகக் காணப்படு கிறது. அவ்வாறு நாம் ஆஸ்திகர்களாக இருந் தால் நம்முடைய நண்பர்களும், சுற்றத்தார்களும் ஆஸ்திகர்களாகத்தான் இருப்பார்கள்.

**ஆஸ்திக்யம் தக்க முறையில் இருக்கவேண்டும்.**

பிரம்மச்சாரிகளுக்கும், கிருஹஸ்தர்களுக்கும் ஸந்தியாவந்தனம், காயத்ரீ ஜபம் முதலிய சில தருமங்களிலும், ஜபங்களிலும் விசேஷ அதிகாரம் சாஸ்திரங்களில் கூறப்பட்டுள்ளது. யதிகளுக்கு

ஓங்கார ஜபத்தில் விசேஷ அதிகாரம் இருக்கிறது. அந்தமுறையைப்பின்பற்றுமல் 'நான் நன்குப்ரணவ ஜபம்' செய்கிறேன் என்ற துரபிமானத்துடன் ஸந்தியாவந்தனம், காயத்ரீ ஜபம் முதலியவை களை பிரம்மசாரிகளும், கிருஹஸ்தர்களும் கைவிட் டால் அது தவறு. அவ்வாறே யதியும் தனக்குரிய ஜபம் முதலியவற்றைத்தான் செய்யவேண்டும். வேதத்தில் கூறிய மார்க்கத்தில் அதிகாரமில்லாத வர்களுக்கு மற்ற பாஷையில் கூறியபடி தேவதா ராதனம் செய்யவேண்டிய கடமை உண்டு. அத னைப் பின்பற்றுதல் அவர்களுக்கு நன்மையை அளிக்கும். அவரவர்க்குரிய முறையைப் பின்பற் றுதல் இவ்வுலகில் சுகத்தை அளிப்பதுடன் பரலோகத்திலும் சுகத்தை அளிக்கிறது.

மனு வசனம்

ऋषयो दीर्घसंध्यत्वाद्दीर्घमायुरवाप्नुयुः ।
प्रज्ञां यशश्च कीर्तिं च ब्रह्मवर्चसमेवच ॥

(अध्यायम् 4, श्लोक 94)

ரிஷயோ தீர்க்கசந்த்யத்வாத்தீர்க்க மாயுரவாப்னுயுః
ப்ரஜ்ஞாம் யசச்ச கீர்த்திம் ச பிரும்மவர்ச்ச சமேவச.

[முனிவர்கள் நீண்டகாலம் விரிவாக ஸந்தியா வந்தனம் செய்ததால் நீண்ட ஆயுளையும் நல்ல புத்தியையும் பிரசித்தியையும் அழிவற்ற புகழை யும் பிரும்மதேஜஸ்ஸையும் அடைந்தனர்].

ஸந்தியாவந்தனம் முதலியவை செய்வதுடன் ஸ்தோத்திர பாடங்களையும் கூறுதல் விசேஷ பலனை அளிக்கும். இவைகளையெல்லாம் மிகவும் சிரத்தையுடன் செய்யவேண்டும்.

अश्रद्धया हुतं दत्तं तपस्तप्तं कृतं च यत् ।
असदित्युच्यते पार्थ न च तत्प्रेत्य नो इह ॥
(गीता अध्यायम् 18, श्लोक 28)

அஸ்ரத்தயா ஹுதம் தத்தம் தபஸ்தப்தம் க்ருதம் ச யத்
அஸதித்யுச்யதே பார்த்த நச தத் ப்ரேத்ய நோ இஹ.

சிரத்தை இல்லாமல் செய்யப்பட்ட ஹோமம், தானம், தவம், வேறு காரியம் யாதாயினும் அஸத்து=இல்லாத பொருள். ஹே! அர்ஜ்ஜுனு அது மேலுலகத்திலும் பயனளிப்பதில்லை. இவ்வுலகத்திலும் பயனற்றது.

## நதிதீர வாசம் சிறந்தது.

தாமிரபரணி நதியின் மஹிமையினுல் இவ்வூரிலுள்ள ஜனங்கள் விடியற்காலையில் எழுந்து பகவானுடைய நாமங்களை கீர்த்தனம் செய்து கொண்டு பெண்கள் தமது காரியங்களைச் செய்வதும், ஆண்கள் ஸ்நானம் முதலிய காரியங்களில் ஈடுபடுவதும் மனதிற்கு குதூகலத்தை அளிக்கின்றன. இந்த நிலை காளிதாஸ கவியின் வசனத்தை ஞாபகத்திற்குக் கொண்டுவருகிறது.

तच्छिष्या ध्ययन निवेदितावसानाम्

தச்சிஷ்யா த்யயன நிவேதிதாவ ஸானும்

[திலீப மகாராஜன் வசிஷ்டமா முனிவரின் ஆசிரமத்தில் தர்ப்பைப் படுக்கையில் நித்திரை செய்து இரவு முடிந்ததை அந்த முனிவருடைய சிஷ்யர்கள் வேதங்களை ஓதுவதால் உணர்ந்தார்-என்று கருத்து]

சில ஊர்களில் காலை 9 மணிக்கு எழுதல் விடியற் காலையில் எழுதல் என்று கருதப்படுகிறது.

அப்படியில்லாமல் பிராம்ம முகூர்த்தத்தில் எழுந்து பகவானுடைய நாமங்களை கீர்த்தனம் செய்தல் குலத்தின் மேன்மைக்கு மட்டுமல்ல தேசத்தின் மேன்மைக்கும் காரணமென்பதில் ஐயமில்லை.

**नरदेहातिक्रमणात्प्राप्तौ पश्वादि देहानाम्।**
**स्वतनोरप्यज्ञाने परमार्थ स्यात्र का वार्ता ॥**
**(प्रबोध सुधाकरः श्लोकः 17)**

நர தேஹாதி க்ரமணாத்பிராப்தெள பச்வாதி தேஹானாம்
ஸ்வதநோரப்யஞானே பரமார்த்தஸ்யாத்ர கா வார்த்தா.

[மானிடப் பிறவியை வீணாகக் கழித்து அதன் பயனாக விலங்கு முதலிய பிறவிகளில் பிறந்தால் தன்னுடைய உடலைப்பற்றியே அறிந்துகொள்ளத் திறமையற்ற அப்பிறவிகளில் ஆத்ம தத்துவத்தை உணர்வது அரிது என்பதுபற்றிக் கூறவும் வேண்டுமோ?]

ஆகவே, சிறந்த தாமிரபருணி நதியின் தீரத்தில் வசிக்கின்ற உங்களுடைய ஆசாரிய பக்தியே இந்த ஊரில் மழை பொழிந்ததன் காரணம் என்று

எனது அபிப்பிராயம். உங்களுக்கு ஆசாரிய பக்தி மிகுந்து விளங்குவது போலவே எனது அன்பும் அளவுகடந்ததாக இருக்கிறது. நான் உங்களை மறக்க முடியாது. கண் முதலிய இந்திரியங்களைக் கவரும் நிகழ்ச்சி இந்த இடத்தில் ஒன்றுமில்லை. ஆயினும் சென்ற 17 நாட்களாக ஜனங்கள் இங்கு கூடியது வியப்பைத் தருகிறது. இத்தகைய சீடர்களை ஆச்சாரியர் ஒருநாளும் மறக்க முடியாது. சிருங்கேரி உங்களது அரிய க்ஷேத்திரம். கல்யாணபுரம் சிருங்கேரி ஸன்னிதானத்திற்கு அன்பார்ந்த சிஷ்யர்களுடைய வாசஸ்தலம் என்ற நினைவு எப்பொழுதும் ஒரே நிலையில் நிற்கும் அல்லவா? அந்த நிலைக்கு மேன் மேலும் வளர்ச்சி நிச்சயம்-ஆகையால், கல்யாணபுரி வாசிகளாகிய நீங்கள் கர்மானுஷ்டானங்களை தவறாது செய்து மேன்மேலும் சிரேயஸ்ஸை அடைவீர்களாக.

गंगातरंग रमणीय जटाकलापं
गौरीनिरन्तरविभूषित वामभागम् ।
नारायणप्रियमनङ्गमदापहारं
वारणसीपुरपतिं भज विश्वनाथम् ॥ 1

वाचामगोचर मनेक गुणस्वरूपं
वागीशविष्णु सुरसेवित पादपीठम् ।
वामेन विग्रहवरेण कलत्रवन्तं
वारणसीपुरपतिं भज विश्वनाथम् ॥ 2

भूताधिपं भुजगभूषणभूषितांगं
व्याघ्राजिनाम्बरधरं जटिलं त्रिनेत्रम् ।
पाशांकुशाभयवरप्रदशूलपाणिं
वारणसीपुरपतिं भज विश्वनाथम् ॥ 3

शीतांशु शेभितकिरीटविराजमानं
फालेक्षणानल विशेषितपञ्चबाणम् ।
नागाधिपारचित भासुरकर्णपूरं
वारणसीपुरपतिं भज विश्वनाथम् ॥ 4

पञ्चाननं दुरितमत्तमतङ्गजानां
नागान्तकं दनुजपुंगवपन्नगानाम् ।
दावानलं मरणशोकजटाटवीनां
वारणसीपुरपतिं भज विश्वनाथम् ॥ 5

तेजोमयं सगुणनिर्गुणमद्वितीयं
मानन्दकन्द मपराजितमप्रमेयम् ।
नागात्मकं सकलनिष्कलमात्मरूपं
वारणसीपुरपतिं भज विश्वनाथम् ॥ 6

रागादिदोषरहितं स्वजनानुरागं
वैराग्यशान्तिनिलयं गिरिजासहायम् ।
माधुर्यधैर्यसुभगं गरलाभिरामं
वारणसीपुरपतिं भज विश्वनाथम् ॥ 7

आशां विहाय परिहृत्य परस्य निन्दां
पापेरतिं च सुनिवार्य मनः समाधौ ॥
आदाय हृत्कमलमध्यगतं परेशं
वारणसीपुरपतिं भज विश्वनाथम् । 8

वारणसीपुरपतेः स्तवनं शिवस्य
व्याख्यातमष्टकमिदं पठते मनुष्यः ।
विद्यांश्रियं विपुलसौख्यमनन्तकीर्तिं
सम्प्राप्य देहविलये लभते च मोक्षम् ॥ 9

---

## 8-வது அத்தியாயம்.

### *நாமஸங்கீர்த்தனம்*

हरेर्नामैव नामैव नामैव मम जीवनम् ।
कलौ नास्त्येव नास्त्येव नास्त्येव गतिरन्यथा ॥

ஹரேர்ந்ரமை நாமைவ நாமைவ மம ஜீவனம்
கலௌ நாஸ்த்யேவ நாஸ்த்யே நாஸ்த்யேவ கதிரந்யதா.

*ஹரியினுடைய பெயர்தான் என்னுடைய வாழ்க்கைக்கு முக்கியமான சாதனம். கலிகாலத்தில் அதைத் தவிர வேறு உபாயமே இல்லை. ஹரி=பாபங்கள் யாவற்றையும் அபஹரிக்கிறவர் பந்தத்தில் கட்டுண்ட ஜீவனுக்கு முக்தி சுகத்தை யளிப்பதற்கு ஹரியினுடைய நாமத்தைத் தவிர வேறு உபாயம் கிடையாது. ஆகையால் கலிஸந்தாரண உபநிஷத்தில் வசனம்—*

हरे राम हरे राम राम राम हरे हरे ।
हरे कृष्ण हरे कृष्ण कृष्ण कृष्ण हरे हरे ॥

ஹரே ராம ஹரே ராம ராம ராம ஹரே ஹரே.
ஹரே கிருஷ்ண ஹரே கிருஷ்ண கிருஷ்ண கிருஷ்ண ஹரே ஹரே.

இவ்வாறு நாமங்களைக் கூறுதல் ஜீவனுக்குப் பேரானந்தமாகிய முக்தி சுகத்தை யளிக்கிறது. அப்படியிருக்கையில், பக்தியுடன் பகவானுடைய லீலா விபூதிகளை சிரவணம் செய்து அவைகளையே மனதில் தியானம் செய்தால் அதன் பயனைப் பற்றிக் கூறவேண்டுமா ?

இவ்வூரில் முன்காலத்தில் பாகவதாசிரவணம் வெகு வருஷங்களாக நடந்துவந்ததைக் கேட்க சந்தோஷமடைந்துள்ளோம். இன்னும் அத்தகைய கதா சிரவணங்கள் இடைவிடாது நடத்தும்படி ஆஸ்திக ஜனங்களாகிய நீங்கள் யாவரும் முயற்சி செய்ய வேண்டுமென்று ஞாபகப்படுத்துகிறோம்.

---

## 9-வது அத்தியாயம்.

### தானம் சிறந்ததாக இருக்கவேண்டும்

[கடோபனிஷத்தில்—நசிகேதருடைய கதை]

வாஜஸ்ரவஸ்ஸின் புத்திரனை உத்தாலகர் தான் செய்யும் யக்ஞங்களின் பலன்களை விரும்புகிறவனாக எல்லாச் செல்வங்களையும் தானம் செய்தார். அவருக்கு நசிகேதஸ் என்ற புத்திரர் இருந்தார்.

சிறுவனான அவனுக்குத் தனது தந்தை தானம் செய்யும் காலத்தில் மனதில் சிரத்தை உண்டா

யிற்று. தன் தந்தை செய்யும் தானம் சிறந்த தல்ல. சிறப்பாக செய்யவேண்டும் என ஆசை கொண்டார்.

**पीतोदका जग्धतृणा दुग्धदोहा निरिन्द्रियाः ।**
**अनन्दा नाम ते लोकास्तान् स गच्छति ता ददत् ॥**
**(कठोपनिषत् 1-3)**

பீதோதகா ஜக்தத்ருணா துக்ததோஹா நிரிந்த்ரியா: !
அனந்தா நாம தே லோகாஸ்தான் ஸகச்சதித்தா ததத் !!

தனது வாழ்க்கை காலத்தில் குடிக்கவேண்டிய தண்ணீர் முழுதையும் குடித்தவைகளும், உண்ண வேண்டிய புல் யாவற்றையும் தின்றவைகளும், கறக்கவேண்டிய பால் அனைத்தையும் கறந்தவை களும், இந்திரியங்களின் சக்தி குன்றியவைகளும் ஆகிய பசுக்களை தானம் செய்பவன், அடையக் கூடிய உலகங்கள், துக்கத்தையே அளிக்கும் உல கங்களாகும். அங்குதான் அவன் செல்வான். தன் தந்தை செய்யும் தானம் சிறந்ததல்ல என்று அந்த முனிகுமாரன் உணர்ந்தான். தான் நல்ல வன்மையுள்ள இளம் வயதில் இருப்பதால் தான ம்ாக அளிக்கப்பட்டால் தந்தைக்கு நன்மை உண் டாகும் என்று சிரத்தையுடன் கருதினான். தந்தை யிடம் வினவினான்.

**सहोवाच पितरंतत कस्मै मां दास्यसीति ।**
**(कठोपनीषम् 1-4)**

ஸஹோவாச பிதரம் தத கஸ்மை மாம் தாஸ்ய ஸீதி.

தந்தையே! என்னை யாருக்கு தானமாக அளிக்கப் போகிறீர்கள். இவ்வாறு 2, 3 தடவை புதல்வன் வினவ தந்தை கோபங்கொண்டு 'உன்னை மிருத்யுவிற்கு தானம் செய்கிறேன் என்று கூறினர்.

நாம் செய்யும் தானப்பொருள் பிறனுக்கு உபயோகமுள்ளதாக இருக்கவேண்டுமென்று பிர கிருதத்தில் தெரிந்துகொள்ளவேண்டிய விஷயம்

முனிகுமாரன் தந்தையின் ஆக்ஞைப்படி அவருடைய தவத்தின் மஹிமையினலேயே யமனுடைய புரத்திற்குச் சென்றான். யமன் தனது கிருஹத்தில் இல்லாத தினத்தில் அவ்விடம் சென்று தங்கினர். யாரும் 'ஏன்' என்று கேட்பார் இல்லை. மூன்று நாட்களுக்குப் பிறகு யமன் திரும்பிவந்து பார்க்கையில், கிருஹத்தின் வாயிலில் ஒரு முனிகுமாரனைக் கண்டான். மூன்று தினங்கள் தன்னுடைய இல்லத்தில் ஆகாரம் அளிக்கப்படாமையால் உபவாசம் இருந்த முனிகுமாரனைக்கண்டு யமன் பயந்துநடுங்கி வேண்டினன். "பகவானே! உங்களுக்கு நமஸ்காரம். தாங்கள் எனது இல்லத்தில் மூன்று தினங்கள் உபவாசம் இருந்ததால், பிரஜை, பசுக்கள், புண்ணியம் என்ற மூன்றும் அழிந்துவிடும். ஆகையால் தேவனுகிய நான் மரண தருமமுள்ள தங்களுக்கு மூன்று வரங்களை அளிக்கிறேன். பெற்றுக் கொண்டு என்னைக் காப்பாற்றுங்கள்". முனிகுமாரன் தனது தந்தையின் கோபம் தணிந்து

அவர் தன்னை ஏற்றுக்கொள்ளவேண்டும் என்று முதல் வரத்தையும், தனக்கு அழிவற்ற சொர்க்க சுகம் நிலைக்கவேண்டுமென்று இரண்டாவது வரத்தையும் வேண்டினான். யமனும் அவைகளை அளித்தார்.

மூன்றாவதாக முனிகுமாரர் இந்த உடலைவிட்டு ஆத்மா நீங்கியபின் அந்த ஆத்மா உண்டா இல்லையா என்ற விஷயத்தை எனக்கு உபதேசம் செய்ய வேண்டுமென்று வேண்டினான்.

யமன்:— இது மகளிர் அறிந்துகொள்ளக் கூடிய விஷயமல்ல. தேவர்களால்கூட அறிந்து கொள்ள இயலாதது. ஏராளமான செல்வத்தை அளிக்கிறேன். இந்த வரத்தை வேண்டாதே.

முனிகுமாரன்:— அழியக்கூடிய செல்வத்தை யான் விரும்புகிறேனில்லை. அற்புதமான ஆசாரியர் தாங்கள் ஆத்மதத்துவத்தை தங்களிடமிருந்தல்லாது வேறு யாரிடமிருந்து தெரிந்துகொள்ளப் போகிறேன்.

இவ்வாறு அந்த முனிகுமாரன் உறுதியைக் கண்டு யமதர்மராஜன் ஆச்சரியத்தையும் ஆனந்தத்தையும் அடைந்து அவருக்கு ஆத்மதத்துவத்தை உபதேசம் செய்தார்,

இந்த நசிகேத உபாக்கியானத்திலை தெரிந்து கொள்ளவேண்டிய விஷயம் மற்றொன்று யாதெனில் ஆத்மஸ்வரூபத்தை ஆத்மஞானம் ஸ்வானு

பாவத்திற்கு வந்த சிறந்த ஆசாரியனிடமிருந்து தெரிந்துகொண்டால்தான் பயனுண்டாகும். ஆசாரிய உபதேசமும் இன்றியமையாதது என்பதே யாகும்.

---

## 10-வது அத்தியாயம்.

**गंगापूरप्रचलितजटास्रस्तभोगीन्द्रभीता**
**मालिङ्गन्तीमचलतनयां सस्मितं वीक्षमाणः ।**
**लीलापांगैः प्रणतजनतां नयंश्चन्द्रमौलि**
**र्मोहध्वान्तं हरतु परमानन्दमूर्तिः शिवोनः ॥**

### ஆத்மஞானம் சுகத்திற்குக் காரணம்

மனிதன் தனது வாழ்க்கையில் அனுபவிக்கும் சுகம் யாவும் அவனுடைய அறிவினுல் உண்டாகின்றது. விஷயசுகத்திற்கே காரணம் ஞானம் தான். அழிவற்ற பரமானந்தத்தை அடைவதற்கும் காரணம் ஞானம் என்பதில் ஸந்தேகமில்லை. ஆனுல் அந்த ஞானம் அத்யாத்ம ஞானம் என்று கூறப்படுகிறது. ஆத்மாவைப்பற்றி தெரிந்து கொள்ளக்கூடிய ஞானத்திற்கு அத்யாத்மஞானம் என்று பெயர்.

### ஜீவாத்மாவின் தத்வஞானம் அத்யாத்மஞானம்

ஜீவன் யார்? எக்காரணத்தினுல் ஏற்பட்டவன்? என்ன பிரயோஜனத்தை அடையவேண்டியவன் என்பதை உணருதல் அத்யாத்ம ஞானம்.

**ममैवांशो जीवलोके जीवभूतः सनातनः**
**(गीता अध्यायः 15 श्लोकः 7)**

**மமைவாம்சோ ஜீவலோகே ஜீவபூத: ஸநாதந:**

என்று பகவான் கூறியுள்ளார். இந்த ஜீவ லோகத்தில் ஜீவாத்மா என்னுடைய அம்சம்தான். அவன் அநாதிகாலத்திலிருந்தே உள்ளவன் என்பது பொருள்.

**यथाग्नेः क्षुद्रा विस्फुलिंगा व्युच्चरन्ति,**
**एवं ह्यस्य सर्वे आत्मानो व्युच्चरन्ति**

மாபெருந் தீயிலிருந்து பொறிகள் கிளம்புவதுபோல் பரமாத்மாவினிடமிருந்து ஜீவாத்மாக்கள் கிளம்புகிறார்கள் என்று உபநிஷத்து கூறுகிறது. பரமாத்மனிடமிருந்து தோன்றுவதால் சைதன்ய முள்ளவனாயினும், பெருந் தீயிலிருந்து கிளம்பும் பொறிகள் உஷ்ணசக்தி யுள்ளவையாயினும் தூரத்தில் செல்லச் செல்ல அந்த சக்தி குன்றுவதுபோல, ஜீவர்களும் தூரத்தில் போகப் போக அந்த சைதன்யசக்தி குன்றியவர்களாக ஆகிறார்கள்.

ஆகவே ஜீவனுடைய சுகத்தின் குறைவிற்கும், ஞானத்தின் குறைவிற்கும் சக்தியின் குறைவிற்கும் காரணம் பரமனிடமிருந்து மிக்கதூரத்திலிருப்பதே யாகும். அதிக தூரத்தில் சென்ற தீப்பொறி கடைசியில் கரியாகவே ஆகிறது. அதுபோலவே,

மிக்க தூரத்தில் செல்வதுடன் தபோகுணம் மேலிடுகையில் ஜீவன் சுகங்களை இழந்து மிகத் துன்பங்களை அடைகிருன்.

आसुरीं योनिमामपन्ना मूढा जन्मनि जन्मनि ।
मामप्राप्यैव कौन्तेय ततो यान्त्यधमां गतिम् ॥
(गीता अध्याय: 16 श्लोक: 20)

ஆஸுரீம் யோநிமாபன்னமூடா ஜன்மனி ஜன்மனி
மாமப்ராப்யைவ கௌந்தேய ததோ யாந்த்யதமாம் கதிம்.

[அர்ஜுனு ஆஸுரகுணத்தையடைந்த ஜனங்கள் மூடர்கள். ஒவ்வொரு ஜன்மத்திலும் அவர்கள் தமது ஆஸுர குணங்களால் என்னை அடையாமல் நீசமான பிறவியை அடைகின்றனர்.]

ஆகவே, பகவானை அடைவதற்கு தைவ சம்பத்து வேண்டுமென்பது தீர்மானம். அத்தகைய தைவஸம் பத்துள்ளவர்களுக்கு பகவானை அடைவதற்கு பல நல்ல மார்க்கங்கள் இருக்கின்றன. ஜனங்களுக்கு பலவித உணவுப்பொருள்களில் விருப்பமிருக்கிறது. அந்த உணவுப்பொருள்கள் ஸாத்விகங்களாக இருக்க வேண்டும். ஒரு ஊருக்குப் போவதற்கு பல வழிகள் இருப்பது போலவே, பகவானை அடைவதற்கும் பல மார்க்கங்கள் இருக்கின்றன.

**பகவானை அடைவதற்கு மார்க்கங்கள் மூன்று**

योगास्त्रयो मया प्रोक्ता नृणां श्रेयोविधित्सया ।
ज्ञानं कर्म च भक्तिश्च नोपायोऽन्योऽस्ति कुत्रचित् ॥
(भागवतं स्कन्धं 11 अध्या: 20 श्लो 6)

யோகாஸ்த்ரயோ மயா ப்ரோக்தா ந்ருணாம் ஸ்ரேயோவிதித்ஸயா
ஞானம் கர்மம் ச பக்திச்ச நோபாயோऽன்யோऽஸ்தி குத்ரசித்.

ஒரு பாஷையை அல்லது கல்வியைக் கற்ற வனுக்கு மற்ற பாஷையும், கல்வியும் எளிதில் அறியத்தக்கதாக இருக்கும். அதுபோலவே, கர்ம மார்க்கம், பக்தி மார்க்கம், ஞான மார்க்கம் இவை களில் ஒன்றில் அப்யாஸம் ஏற்பட்டால் மற்றவை எளிதில் உண்டாகும். ஞானம் பகவானை அடைவ தற்கு முதன் முதலான மார்க்கம். அந்த ஞானம் உபநிஷத்துக்கற்றதனால் ஏற்படவேண்டும். உபநிஷத்துக்களை கற்க அதிகாரமில்லாதவனுக்கு அந்த உபநிஷத்துக்களின் கருத்தைக் கூறும் மற்ற நூல்களால் அறிந்துகொள்ளத் தகுதியுண்டு. யுக்திகளாலும் அறிந்துகொள்ளலாம். ஆனால் அந்த யுக்திகள் உபநிஷத்துக்களுக்கு விரோதமாக இருக்கக் கூடாது. ரத்னத்தை அறிந்துகொள்வ தற்கு. தனிப்பட்டமுறையில், அறிவு வேண்டும். எல்லோரும் ரத்னத்தை அறிந்துகொள்ள முடி யாது. அதுபோலவே, எல்லா நூல்களும் ஆத்ம தத்துவத்தை உணர்த்துவதில்லை. நூல்களை படிப்பதுமட்டும் பயனளிக்காது. அவைகளில் கூறும் விஷயங்களை சர்ச்சை செய்து அதற்கு அனுகூலமாக யுக்திகளைப் பயன்படுத்த வேண்டும். பிறகு தத்துவத்தை அனுஸந்தானம் செய்யவேண்டும். ரத்னத்தை பரீக்ஷை செய்ப வன் அவ்வளவு பயிற்சி செய்தால்தான் ரத்னத் தின் தத்துவத்தை அறிய முடியும்.

ஞான மார்க்கத்தை அடைய விரும்புகிறவன் முக்தி சுகத்தை அடைய உறுதியான விருப்பம் உள்ளவனாக இருக்கவேண்டும். செல்வத்தை

விரும்புகிறவன் விருப்பத்திஞல் மட்டும் செல்வத்தை சம்பாதிக்க முடியாது. முயற்சியும் இன்றியமையாதது. அதுபோலவே முக்தி சுகத்தில் தீவிரமான விருப்பம்போல் முயற்சியும் முக்கிய அவசியம். அந்த முயற்சியில் ஈடுபடுதல் தான் ஞான மார்க்கம்.

### கர்ம யோகம்.

மேற்கூறிய ஞான மார்க்கம் உண்டாவதற்கு கர்ம மார்க்கம் அவசியமாகும்.

**अफलाकांक्षिभिर्युक्तैः सात्विकं परिचक्षते ।**

**(गीता अध्याय 17 श्लो 17)**

அபலாகாங்க்ஷிபிர்யுக்தை: ஸாத்விகம் பரிசக்ஷதே.

பயனில் விருப்பமின்றி சிரத்தையுடன் செய்யப்படும் கர்மத்தை ஸாத்விகமான கர்மம் என்று மகான்கள் கூறுகின்றனர். அத்தகைய கர்மயோகம் மனதின் மலங்கள் நீங்குவதற்கு உபயோகப்படுகின்றன. மனத்தின் மலங்கள் விலக பகவானிடம் பக்தியும் ஞானமார்க்கத்தில் சிரத்தையும் உண்டாகின்றன. ஆஞல் சிலர் அவசியம் செய்யவேண்டிய கடமைகளைக்கூட பிரயாஸ ஸாத்தியம் என்று செய்யாமல் விட்டு விடுகின்றனர். அவ்வாறு கர்மங்கள் செய்யாமல் விடுதல், விஷமஜ்வரத்திற்கு அபத்யமான ஆஹாரத்தை சேவிப்பதுபோல் தோஷத்திற்கு காரணமாகும். அவனவனுடைய கடமைகளைச் செய்தல்தான் உத்தமமான கர்மயோகம் என்று நூல்களின் கொள்கை.

**அருவப் பொருளாயினும் பகவான் இருக்கிறார்.**

சிஷ்யன்: கண்களுக்குப் புலப்படாத பகவான் இருக்கிறார் என்று எப்படி நம்பலாம்?

குரு: கண்களுக்குப் புலப்படாத பொருள் இல்லை என்று கூறமுடியாது.

சிஷ்யன்: ஏன்?

குரு: ஆகாயம் கண்களுக்குப் புலப்படுகிறதா?

சிஷ்யன்: இல்லை.

குரு: அத்தகைய ஆகாயம் உண்டா? இல்லையா?

சிஷ்யன்: உண்டு.

குரு: என்ன பிரமாணம்

சிஷ்யன்: விஞ்ஞான சாஸ்த்ர நிபுணர்கள் ஆகாயம் என்ற பொருள் உண்டு என்று நிரூபித்துள்ளார். ரேடியோ மூலமாக நாம் கேட்கும் செய்தி முதலியவைக்கு அந்த ஆகாயம் அனுகூலமாக இருக்கவேண்டும்.

குரு: அதுபோலவே, முனிவர்களும் அருவப் பொருளாயினும், பகவான் ஒருவன் உள்ளார் என்று தீர்மானம் செய்வதை ஏன் ஒப்புக்கொள்ளமுடியாது? ஆகை

யால் பகவான் உள்ளார் என்பதற்கு மாமுனிவர்களுடைய வசனங்களும் உபநிஷத்து வசனங்களும் ஆதாரம்.

பகவான் இருக்கிறார் என்ற நம்பிக்கையை உறுதிப்படுத்திக்கொண்டு பக்தி மார்க்கத்தைப்பின்பற்றவேண்டும்.

## பக்தி மார்க்கம்.

अङ्कोलं निजबीजसंततिरयस्कान्तोपलं सूचिका
साध्वीनैजविभुं लताक्षितिरुहं सिन्धुः सरिद्वल्लभम् ।
प्राप्नोतीह यथा तथा पशुपतेः पादारविन्दद्वयं
चेतोवृत्तिरुपेत्य तिष्ठति सदा सा भक्तिरित्युच्यते ॥
(शिवानन्दलहरी श्लोक 61)

அங்கோலம் நிஜபீஜசந்ததிரயஸ் காந்தோபலம் சூசிகா
சாத்வீநைஜவிபும் லதாக்ஷிதிருஹம் சிந்து: சரித்வல்லபம்
ப்ராப்னோதீஹ யதா ததாபசுபதே: பாதாரவிந்தத்வயம்
சேதோவிருத்திருபேத்யதிஷ்டதி சதா சா பக்திரித்யுச்யதே

அங்கோல மரத்தின் விதை அந்த மரத்தின் வேரை எவ்வாறு அடைகின்றதோ அதுபோலவே மனது பகவானிடம் சென்று நிலைகொண்டிருக்க வேண்டும். பகவானிடத்திலிருந்து கிளம்பிய ஜீவர்களுக்கு ஆச்ரயம் பகவானேயாவார் என்பதற்கு உரிய உதாரணம் முதலாக கூறப்பட்டது. இரண்டாவதாக அந்த ஜீவனுடைய செயல் யாவற்றிற்கும் காரணம் பகவான் தான் என்று விளக்குகிறார். காந்தம் எவ்வாறு பக்கத்திலிப்ப

தால் இரும்பை அசையும்படிச் செய்கின்றதோ, அதுபோல், ஜீவன் செய்யும் காரியங்களுக் கெல்லாம் தூண்டுதலாயிருப்பவர் பகவான் என்ற தீர்மானம் இருக்கவேண்டும். இந்த விஷயம் பாகவதத்தில் கூறப்பட்டுள்ளது.

**यथा भ्राम्यत्ययो ब्रह्मन् स्वयमाकर्ष सन्निधौ ।**
**तथा मे भिद्यते चेतश्चक्रपाणेर्यदृच्छया ॥**

**(भागवतम् स्कन्धः 7 अध्या 5 श्लोक 14)**

யதா ப்ராம்யத்யயோ ப்ரம்மன் ச்வயமாகர்ஷ சன்னிதௌ
ததா மே பித்யதே சேதஸ்சக்ரபாணேர்யத்ருஸ்சயா

[இது பிரஹ்லாதன் தனது ஆசிரியரிடம் கூறும் வசனம். பிரம்மன்! காந்தத்தின் சமீபத்தில் இருக்கும் இரும்பு அசைவதுபோல், சக்ரபாணியாகிய பகவானுடைய ஸன்னிதானத்தினுல் எனது மனம் தற்செயலாகவே செயலாற்றுகிறது — என்று இந்த வசனத்தின் பொருள்]

மூன்ருவதாக பதிவிரதை தனது கணவனை ஆச்ரயிப்பதுபோல் பகவானையே ஆச்ரயிக்கவேண்டும். பதிவிரதை செய்யும் காரியம் ஒவ்வொன்றும் கணவனுக்குப் பிரியமானதாகவே இருக்கும். அத்தகைய காரியங்களால் கணவனை சந்தோஷப்படுத்துவதே தனது கடமை என்று அந்த பதிவிரதை உணருவதுபோல் பகவானுடைய குணங்களை

ச்ரவணம் செய்தல், கீர்த்தனம் செய்தல், ஸ்மர ணம் செய்தல் ஆகிய செயல்களிலேயே பக்தன் பற்றுள்ளவனாக இருப்பான்.

அவ்வாறு பகவானுடைய ஆராதனத்தில் ஈடு படுவதால் பக்தனுக்கு பகவான் ஆச்ரயமாக இருப் பதுடன் பகவானும் அந்த பக்தனுடைய செயலால் தனது மகிமையை விளக்குகிறார். அதற்கு உதா ரணம் 'லதாக்ஷிதிருஹம்' என்று — படரும் கொடிக்கு கொழுகொம்பு தேவைபோல், கொழு கொம்பாகிய அந்த மரமும் தன்னை ஆச்ரயித்து வளரும் கொடியால் விளங்குகிறது.

இவ்வாறு பகவானே தனக்கு ஆச்ரயம் என்று உறுதியான பக்தியின் முடிவான பயன் யாதெ னில், அந்த பக்தன் பகவானுடன் ஐக்கியத்தை அடைந்து, வேற்றுமையின்றி நிலைத்தலேயாகும். 'வாசுதேவ: ஸர்வமிதி ஸ்ம மஹாத்மா ஸு துர்லப:' என்று பகவத்கீதையில் கூறியபடி நிலைமை ஏற் படவேண்டும். அதற்கு ச்ரவணம் முதலிய ஒன் பது வித பக்தியும் முக்கிய அவசியம். அந்த பக்தி யின் மஹிமையால் பகவத் ஸாயுஜ்யத்தை அடைந் தால் பகவானுக்கும், பக்தனுக்கும் வேற்றுமை நீங்குகிறது. அதற்குத் தக்க உதாரணம் 'ஸிந்து: ஸரித்வல்லபம்' என்பது. கங்கை முதலிய நதி சமுத்திரத்தை அடைந்தபின் வேறாக எவ்வாறு காணப்படுவதில்லையோ, அதுபோல் ஜீவனுடைய

மனோநிலைமை (தியானம்) பகவானிடமே நிலைத்தால் வேற்றுமை நீங்குகிறது. ஜீவன் பேரானந்தமான முக்தியை அடைகிறான். பெருந்தீயிலிருந்து வெளிக்கிளம்பிய தீப்பொறி வெகுதூரத்தில் சென்றபின் கரியாக மாறியபோதிலும் அந்தக்கரி மறுபடியும் அதே நெருப்பில் வந்து சேர்ந்தால் உஷ்ணம், பிரகாச சக்தி என்பவை ஏற்படுவது போல், ப்ரமனிடத்தில் லயமடைந்த ஜீவனும் ஸர்வஞ்ஞனாக விளங்குகிறான்.




ஸ்ரீ ராமகிருஷ்ணா பிரஸ், மதுரை:—57.